# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

சோபகிருது-கார்த்திகை
2023 - டிசம்பர்

இணைய வழி
மலர்-1 - இதழ்-4



அருள்மிகு வள்ளி, தெய்வானை உடனுறை சண்முகர்

தென்சபாநாயகர் கோயில், கோவிலூர்

# திருநெல்லை

இணைய வழி ஆன்மீகத் திங்களிதழ்

சோபகிருது – கார்த்திகை

2023–டிசம்பர்

இணையவழி மலர் 1 – இதழ் 4

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

சிறப்பாசிரியர்

பொற்கிழிக் கவிஞர்

சொ.சொ.மீ. சுந்தரம்

ஆலோசகர்

தமிழாகரர் தெ. முருகசாமி

ஆசிரியர் குழு

வெளியிடுபவர்

சீர் வளர் சீர்

நாராயண ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் 630 307

மானகிரி (அஞ்சல்)

(வழி) காரைக்குடி

சிவகங்கை மாவட்டம்

04565–236846

94433 37011

இணைய அச்சாக்கம்

திரு. கணேஷ்

ஸ்ரீபெரும்புதூர்


## பொருளடக்கம்

பக்கம்

# ஆசியுரை



சீர் வளர் சீர்

**நாராயண ஞான தேசிக சுவாமிகள்**

கோவிலூர் ஆதினகர்த்தர்

திருவண்ணாமலையில் நடைபெறும் கார்த்திகைப் பெருவிழா சிறப்பான திருவிழா. திருவருள் துணை கூட்ட திருவண்ணாமலை தீப அருட்காட்சி கிடைத்தது. திருவண்ணாமலை சென்றிருந்த போது நடந்த நிகழ்வுகளைப் பகிர்ந்து கொள்ள விழைகிறேன்.

திருவண்ணாமலையில் உள்ள ஈசான்ய மடத்தில் ஒன்பதாம் பட்டம் இராமநாத சுவாமிகள் காலத்தில் கார்த்திகை தீபத்தன்று மதியம் பெங்களூர் திருச்சி சுவாமிகள் உபயமாக நகர விருந்து நடந்திருக்கிறது. பின்னாளில் எதோ காரணங்களுக்காக அது நின்று போய் விட்டது.

நம் மடத்தின் பன்னிரண்டாம் பட்டம், நாச்சியப்ப சுவாமிகள் அதை மீண்டும் துவங்க எண்ணினார்கள். ஆனால் திருச்சி சுவாமிகள் நிர்வாகத்தில் திருவண்ணாமலை பவழக்குன்று மடம் வந்துவிட்ட காரணத்தால் அவர்கள் அங்கேயே பத்து நாட்கள் அன்னதானமும் நகர விருந்தும் நடத்தினார்கள்.

இரண்டு மடங்களும் மிகுந்த தோழமையோடு இருந்த மடங்கள். இடையில் சிலகாலம் நெருங்கிய தொடர்பில் இல்லாமல் இருந்து விட்டோம். நம்மிடம் திருச்சி மகா சுவாமிகள் அளவில்லாத அன்பு கொண்டவர்கள்.அப்போதே ஸ்ரீ ஸ்ரீ ஜெயேந்திரபுரி சுவாமிகளும் அங்கு நிர்வாகத்தில் இருந்த காரணத்தால் நம் இருவரிடமும் நல்ல புரிதல் இருந்தது.

நாம் பட்டத்திற்கு வந்தவுடன் பலமுறை நாம் அங்கு செல்ல நினைத்தும் இப்போது உள்ள மடாதிபதி ஸ்ரீ ஸ்ரீ ஜெயேந்திரபுரி சுவாமிகள் நம் மடத்திற்கு வர நினைத்தும் காலச்சூழல் இடம் கொடுக்கவில்லை. நவராத்திரியை முன்னிட்டு சிருங்கேரி சென்று திரும்பும்போது நாம் திருச்சி சுவாமிகள் மடத்திற்குச் சென்று சண்டி ஹோமம் மற்றும் சத்சங்கத்தில் கலந்து

கொண்டோம்.மேலும் நம் உறவை மேம்படுத்தும் விதமாக பல வழிகளிலும் ஒத்துழைக்க இருவரும் முடிவு செய்தோம்.

அதன் தொடர்ச்சியாக இந்த ஆண்டு தீபத்திருவிழாவிற்கு ஸ்ரீ ஸ்ரீ ஜெயேந்திரபுரி சுவாமிகளும் நாமும் முன்னதாகவே சென்று விட்டோம் அங்கு பவழக்குன்று மடத்தில் அவர்கள் கட்டியுள்ள புதிய கட்டடத்தை நாம் திறந்து வைத்தோம்.தீபத்திற்கு முந்தைய நாள் நம் ஈசான்ய மடத்தில் நடைபெறும் நகர விருந்து மற்றும் மகேஸ்வர பூஜையில் அவர்களும் தீபத்தன்று பவழக்குன்று மடத்தில் நடைபெற்ற சத்சங்கம், காரியசித்தி ஹோமம் மற்றும் மகேஸ்வர பூஜையில் நாமும் கலந்து கொண்டோம். இனி வரும் ஆண்டுகளிலும் இதே போல் இருவரும் கலந்து கொள்வதென்று முடிவு செய்தோம். இறை சித்தம்.

ஈசான்ய மடத்தில் மூன்று நாட்கள் தொடர்ந்து அன்னதானம் நடைபெற்றது ஈசான்ய ஞானதேசிகர் ஜீவ சமாதியில் மூன்று நாட்கள் சிறப்பு அபிடேக ஆராதனை நடைபெற்றது.குறிப்பாக இருபத்தைந்தாம் தேதி பழனி சாது சுவாமிகள் மடாதிபதி திருப்பெருந்திரு சண்முக அடிகள் அவர்கள் திருக்கரத்தால் அபிடேகமும் வழிபாடும் நடைபெற்றது சிறப்பான ஒன்று. அவர்களும் இருபத்தைந்தாம் தேதி நடைபெற்ற மகேஸ்வர பூஜையில் கலந்து கொண்டார்கள்.

இதனைத் தொடர்ந்து பழனி சாது சுவாமிகள் மடத்தில் (திருவண்ணாமலையில்) நடைபெற்ற அன்னதானத்தைக் காணும் வாய்ப்பை பெற்றோம்.10 நாட்களும் தொடர்ந்து சுமார் 1000 முதல் 3000 பக்தர்களுக்கு அன்னதானம் நடைபெற்றவண்ணம்



இருந்தது நமக்கு பெருமகிழ்வைத் தந்தது. அதற்கு வந்த பொருட்கள் எல்லாமே அன்பர்கள் நன்கொடையாக அளித்தது என்றும் உணவு தயாரிப்பது மற்றும் அதற்கு உதவி செய்பவர்கள் என அனைவருமே தன்னார்வத் தொண்டர்கள் என்றும் அவர்களில் பலர் பொருளாதார நிலையில் மிகவும் மேம்பட்டவர்கள் என்றும் அறிந்தபோது மிகவும் வியப்பு உண்டா யிற்று. இந்த உணர்வு நம் மடத்திற்கு வரும் அன்பர்களிடமும் உருவானால் நாம் பல அரிய பெரிய காரியங்கள் செய்ய இறைவன் அருள் புரிவார் என்று நம்புகிறோம்.

### மெ க அன்னசத்திரம் மற்றும் அ க ஜாகை:

இந்த ஆண்டு நகரத்தார் நிர்வாகத்தில் உள்ள அனைத்து அன்ன சத்திரங்களில் இருந்தும் அழைத்திருந்தார்கள். அவர்கள் செய்துள்ள அறங்களை நேரடியாகப் பார்க்கும் வாய்ப்பை ஏற்படுத்தி கொடுத்த இறையருளுக்கு நன்றி.

மெ க சத்திரம் செய்திருக்கும் செயல், நாம் நினைத்துப் பார்க்க இயலாத அளவில் செய்துள்ள தர்மம்.

தீபத் திருவிழாவில் வலம் வரும் அனைத்து

வாகனங்களும் இவர்கள் செய்தவை. எந்த வாகனமும் நாம் சாதாரணமாகப் பார்க்கும் அளவில் உள்ள வாகனம் அல்ல. மிகப்பெரிய வாகனங்கள் பழனி சாது சண்முக அடிகள் இதைக் குறித்து நம்மிடம் சொல்லியதை இங்கு அப்படியே மேற்கோள் காட்ட விரும்புகிறோம். “எத்தனையோ திருவிழாக்கள் நாம் பார்த்திருக்கிறோம். ஆனால் திருவண்ணாமலை ஐந்தாம் திருநாள் போல ஒரு திருவிழாவை பார்த்ததில்லை. அந்த ரிடப வாகனம் போன்ற ஒரு வாகனத்தைப் பார்க்க கண் கோடி வேண்டும்'', இன்றைக்கும் வியக்கும் வண்ணம் இது போன்ற வாகனங்களை நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் செய்த நகரத்தார் மனம் எவ்வளவு விரிந்தது என்று எண்ணும்போது மிகவும் பெருமையாக இருக்கிறது. மேலும் பத்து நாள்கள் நடைபெறும் திருவிழாவில் எட்டு நாட்கள் நகரத்தார் உபயமாக இன்றளவும் நடைபெறுகிறது.

ஆனால் இன்றய இளைய தலைமுறையின் ஈடுபாடு இது போன்ற அறங்களில் குன்றி இருப்பது வேதனை அளிக்கிறது. இளைய தலைமுறையினரை இனி வரும் காலங்களில் அறங்காவலர்களாக நியமித்து அவர்களை நிதி நிர்வாகிகளாக மட்டும் இல்லாமல், புதிய அறங்களைச் செய்ய வைக்க முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும். அதற்கு இறையருள் துணை புரிய வேண்டும்.

### ஒயா மடம்:

ஒரு பெரிய அன்ன சத்திரம்.. இப்போதைய அறங்காவலர்கள் பொறுப்பேற்று பெருமளவு சீர் செய்திருக்கிறார்கள். மேலும் இந்த ஆண்டு முதல், நாள்தோறும் மூன்று வேளை உணவு அளிக்கிறார்கள். குறிப்பாக தீப திருவிழா காலத்தில் வேளை ஒன்றுக்கு சுமார்முன்னூறு முதல் ஐநூறு பேருக்கு அன்னம்பாலிப்பு நடைபெறுகிறது. அன்னதானத்திற்கு நன்கொடைகளும் வருகின்றன. இன்னும் இந்த அறங்களைச் செம்மையாக நடத்த அறங்காவலர்கள் முனைப்பாக இருப்பது மகிழ்ச்சி அளிக்கிறது.

அன்பர்கள் அனைவரும் ஈசான்ய மடம்,பவழக்குன்று மடம் ,சாது சுவாமிகள் மடம் மற்றும் ஒயா மடம் போன்ற மடங்கள் நடத்தும் அன்னதானங்களில் தங்களால் இயன்ற அளவு பங்கு கொண்டு நல்வினைப் பயன்பெற நம் ஆசிகள்.

இதுபோன்று அறம் வளர அறம் வளர்த்த நாயகி அருள்புரிவாள். அண்ணாமலையாரின் அருள் உங்கள் இல்லங்களில் நிறையட்டும். அறம் பெருகட்டும்.

## திருமந்திரம்

அப்பினில் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர்ப்பெற்று உருச்செய்த அவ்வுரு
அப்பினிற் கூடிய தொன்றாகு மாறுபோல்
செப்பினிற் சீவன் சிவத்துள் அடங்குமே

**விளக்கம்:**

கடல் நீரில் உள்ள உப்புத் தன்மை சூரியனின் வெப்பத்தினால் உப்பு என்கிற பெயருள்ள உருவம் பெறுகிறது. அந்த உப்பு மறுபடியும் நீரில் கலக்கும் போது நீரோடு நீராக மாறி விடும். அது போலவே நம்முடைய சீவனும் சிவத்தினில் இருந்து உருவம் பெற்று வந்துள்ளது. நமது ஆயுள் முடியும் போது, நாம் மறுபடியும் சிவத்தினுள் கலந்து விடுவோம்.

## கோவிலூரின் கதை

# கோவிலூர் ஆண்டவர் திவ்ய வரலாறு

பகுதி-4

# முப்பிறப்பும் உணர்ந்த ஞானி

- கனகு
காரைக்குடி



சீர் வளர் சீர் முத்தி ராமலிங்க ஞான தேசிக சுவாமிகள்

ஆண்டவர் முத்துராமலிங்கரின் ஒவ்வொரு சொல்லும் அமிர்தம். அது தாழ்ந்தோரை உயர்த்தும். நம்பியோரைக் கைகொடுத்து ஆசீர்வதிக்கும். சொல்லுக்குச் சொல் சத்தியத்தைப் பெருக்கும். பலருக்கும் ஆண்டவர் முத்துராமலிங்கர் உபதேசம் செய்து ஆன்மாக்களை மேன்மை பெறச் செய்துள்ளார்.

### ஆணவத்திற்கு அடையாளமும் – நாய் பட்ட பாடும்

ஆண்டவர் முத்துராமலிங்கர், ஒருமுறை கொற்றவாளீசுவரர் கோயிலில் இருந்தபோது "யான், எனது என்னும் அகங்காரங்கள் போனால் முத்தி சித்திக்கும்" என்று உபதேசித்தார். ''யான், எனது எப்போது அகலும்?" என்று அருகில் இருந்தோர் ஆண்டவரிடம் வினவினர்.

சற்று தூரம் நடந்து வந்து எழும்பிக் கொண்டிருக்கும் திருமடத்தின் வாசலில் நின்றுகொண்டு ஆண்டவர் இதற்கு இப்போதே உங்களுக்கு உதாரணம் காட்டுகிறேன் என்றார். அப்போது நாய்

ஒன்று இவர்களைக் கடந்து மடத்திற்குள் நுழைந்தது.நுழையும்நாயின் காதுகளுக்கும் அருகில் இருந்தோர் காதுகளுக்கும் கேட்கும்படி ஆண்டவர் ‘‘ஏ! வெள்ளை நாயாரே! உள்ளே நுழையாதே. உள்ளே நான், நீ என்பவை நிறைய இருக்கின்றன. ஆதலால் உன்னை அங்கு வர விடார்கள்” என்றார். இருந்தாலும் ஞானச்சொல் கேட்காது அந்த நாய் உள்ளே சென்றது.

சற்று நேரத்தில் அதனை உள்ளிருந்தவர்கள் விரட்ட பயந்து திரும்பி வாசல் பக்கமே ஓடிவந்து, ஆண்டவரின் அருகில் நின்று கொண்டு அவரைப் பார்த்தது. உயிர்களில் உறைந்திருக்கும் ஆன்மாக்கள் அனைத்தும் ஒரே தரத்தின; திறத்தின; ஏற்ற இறக்கம் அற்றன. அப்படி இருக்க மனிதர்களின் உடலில் உறைந்திருக்கும் ஆன்மா நாயுடலில் உறைந்திருக்கும் ஆன்மாவை உணர்ந்து கொள்ளாமல் விரட்டுகிறது. மடத்திற்குள் இருக்கும் மனித ஆன்மாக்களுக்குள் நான், எனது என்ற எண்ணம் நிறைந்திருக்கிறது. இதன் காரணமாக நாய் ஆன்மா மனித ஆன்மாக்களால் ஏற்கப்படாமல் விரட்டி நிற்கிறது. நாய் ஆன்மா அவர்களை விரட்டலாம். ஆனால் அது சகித்துக்கொண்டு வெளிவந்துவிட்டது. எனவே எல்லா உயிர்களையும் தம்முயிர் போல நினைக்கும் எண்ணம் வந்தால் நான் நீ என்னும் பேதம் நீங்கும் என்று ஒரு நாடகத்தை நிகழ்த்திக் காட்டினார் ஆண்டவர். “யாமே அவை எல்லாமானால் யானும் எனதும் போமே, சிவமயமாய்ப் போம்” என்ற பாடலைப் பாடி யான், எனதை விரட்ட தன்னை நம்பி வந்தோர்களுக்கு உபதேசம் செய்தருளினார் ஆண்டவர் முத்துராமலிங்கர்.

ஆண்டவர் ஒவ்வொரு நாளும் உபதேசம் செய்வதோடு, தன்னை அழைத்தோரின் தெய்வ நிகழ்வுகளுக்கும் சென்று வந்தார். திருப்பெருந்துறை ஆவுடையார்கோயில், பிள்ளையார்பட்டி கற்பக விநாயகர் கோயில், மாத்தூர் ஐநூற்றீஸ்வரர் கோயில் போன்ற கோயில்களுக்கும் அவ்வப்போது ஆண்டவர் சென்று வந்தார்.

## ஆண்டவரைச் சரணடைந்த அப்பாபோலீசு

ஆண்டவர் காரைக்குடியில் மகாபாரதச் சொற்பொழிவை நிகழ்த்தினார். இப்பொழிவில் என்ன சொல்லப்படுகிறது என்பதைக் கேட்பதற்காக அக்காலத்தில் காரைக்குடியைச் சுற்றியுள்ள இடங்களில் கண்காணித்து வந்த காவலர் அப்பாபோலீசு என்பவர் வந்தார். அன்றைக்கு மிடுக்கும், தலைப்பாகையும், விரைப்பும் கொண்டு ஆண்டவரின் பொழிவைக் கேட்டார். அடுத்தநாள் அவர் பணிவுடன் கேட்க வந்தார். மறுநாள் அவர் ஆண்டவரை வணங்கித் தன் காவல்பணியை விட்டு விலகி ஆண்டவரின் அருகில் இருந்து, ஆண்டவர் சொன்ன பணிகளைச் செய்து அடிமைத்திறம் பூண்டார். அனைவரையும் அன்பால் அணைந்து கொள்ளும் நற்குருவாக சற்குருவாக ஆண்டவர் விளங்கினார்.

## அருள்மிகு கொற்றவாளீஸ்வரர் திருக்காட்சி

உயிர்களை உய்விக்க குருவே துணை. குருவின் காட்சிக்கு எளியவராக எம்பெருமான் எப்பொழுதும் விளங்கினார். ஆண்டவர் ஒருநாள் இரவு பன்னிரண்டு மணியை ஒட்டிய காலத்தில் அருள்மிகு கொற்றவாளீசுவரர் சன்னதிக்கு அருகில் வந்து கொண்டிருந்தார். அப்போது, கோடி

சந்திரர்களின் பிரகாசத்தோடு, சந்திரன், கங்கை, நெற்றிக்கண், நீலகண்டம், ஆகியவற்றோடு உமாதேவியுடன் காளை வாகனத்தில் எம்பெருமான் காட்சியளித்தார். ஆண்டவர், ஆண்டவரைத் துதிசெய்து மகிழ்ந்தார். இந்தப் பிரகாசக்காட்சி சிறிதுநேரம் நீடித்தது. இந்தப் பிரகாசத்தைத் தன் சீடர்களிடம் சொல்லித் துதித்தார் முத்துராமலிங்க ஆண்டவர்.

## ஆண்டவரின் முற்பிறவி

ஆண்டவர் ஒருமுறை தன் சீடர்களுடன் இருக்கையில் தன் முற்பிறவிகள் பற்றித் தானே விளக்கமளித்தார். ஆண்டவர் பிராமண சந்நியாசி, பிரதிபந்தஞாநி, போன்ற பிறவிகளுக்குப் பின் தன்னோடு ஒட்டியிருந்து அற்ப இச்சைகளின் காரணமாக இப்பிறவி எடுத்துள்ளேன். இதுவே நிறைபிறவி இதுவே முடிந்த சென்மம் என்று தன் முத்தி நிலையை முத்திராமலிங்க ஆண்டவர் வெளிப்படுத்தினார்.

## அருளிச்செயல்கள்

ஆண்டவர் பலருக்கும் நடக்கப் போகின்றவற்றை முன்கூட்டியே தெரிவித்து நடப்பதை அறிவித்துள்ளார். கல்லல் ஐயாவின் கிணறு உதவாமல் போவதைச் சொன்னார். ராயவரம் அப்புக்குட்டிச் செட்டியாருக்கு நூல்தொழிலால் வந்த நட்டம் நாற்பத்தெட்டு நாளில் மாறும் என்று விபூதிப்பை அருளினார். ஆண்டவரைச் சந்திக்க நெல்வயலுக்கு வந்த ஒருவர் "ஞானிகளைக் கண்டால் வினை பறந்தோடுமாம். உங்களைக் கண்டதால் எவ்வித அனுபவமும் இல்லையே" என்று கூறினார். அதற்கு ஆண்டவர் ''பரிசவேதி என்ற பொருள் உலோகங்களைப் பொன்னாக்கி விடும். அதனால் குட்டிச்சுவரை ஒன்றும் செய்ய இயலாது" என்று சொன்னார். கேட்டவர் தலைகுனிந்தார். பல நோய்கள் வந்து தாக்கப்பட்டார். திருநெல்லை அம்மன் திருத்தேருக்குக் காரைக்குடி கொப்புடையவள் தேர்ச்சீலைகளை அலங்கரிக்கத் தருவது உண்டு. தேர்ச்சீலை தருவதால் அருள்மிகு கொப்புடையவள் என்செய்யுமோ என்று பயந்து ஒருமுறை அதனைத் தர நிர்வாகிகள் தயங்கினர். ஆண்டவர் "கடல்வளரும் திங்கள்போல் காரைக்குடி திருநெல்லை திருவருளால் வளரும்" என்றதும் தேர்ச்சீலை வந்தது. காரைக்குடியும் சிறந்தது. ஆதப்பச்செட்டியார் மகனான அண்ணாமலைச்செட்டியார் என்பவரின் வயிற்றுவலி ஆண்டவர் தந்த உணவுக் கவளத்தால் மாறியது.

இவ்வாறு ஆண்டவரின் வாழ்க்கை அருள்வாழ்க்கையாக நாளும் வளர்ந்து வந்தது.

*(வளரும்)*

---

**இந்த இதழ் முழுமையாக மின்னணு இதழாக இருக்கும்.இந்த இதழ் வேண்டுபவர்கள் 9443337011 என்ற தொலைபேசி எண்ணிற்கு புலனத் தொடர்பினைச் (WhatsApp) செய்தால் அவர்கள் இந்த குழுவில் இணைக்கப்படுவார்கள்.**

---

# பத்திமை கால ஆடற்கலை



**இரா. கலைக்கோவன்,**
இயக்குநர்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார்
வரலாற்றாய்வு மையம்,
திருச்சிராப்பள்ளி

பொதுக்காலம் 6ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த அப்பர், சம்பந்தர் பாடிய ஆறு திருமுறைகளும் வரலாற்றுக் களஞ்சியங்களாக விளைந்து ள்ளன. இருண்டகாலமாக ஒதுக்கப்பட்டுள்ள மூன்று நூற்றாண்டுக் காலத் தமிழ்நாட்டு வரலாற்றை ஒளிப்படுத்தக் கிடைத்திருக்கும் இலக்கியச் சான்றுகளில் இவர்தம் திருமுறைகள் தலையாயவை. சங்கம் மருவிய காலத்தின் இறுதிப்பகுதியில் நிகழ்ந்த ஆடற்கலை மாற்றங்களையும் வளர்நிலைகளையும் அனைத்துத் தளங்கள் சார்ந்தும் இவர்தம் பதிகங்கள் பதிவுசெய்துள்ளன. அக்காலத்து வழக்கிலிருந்த ஆடல் இலக்கண நூல்களின் சுவடுகளை இப்பதிகங்கள் உள்வாங்கியிருப்பதைப் பாடலடிகளில் சுடர்விடும் சொற்களும் தொடர்களும் நன்கு புலப்படுத்துகின்றன. இப்பதிகங்களை ஆழ அணுகுவோர், இருண்டகால வரலாற்றின் இறுதி நூற்றாண்டில் ஆடல் செழித்திருந்த செய்தியைப் பெறுவதுடன், அத்தகு செழிப்பைப் பெற, சங்க வேர்களில் இருந்து, அது, பழைமையுடன் ஒன்றியும் புதுமைகளை அவாவியும் எத்தனை விரைந்து, வளர்ந்து கிளைத்துள்ளது என்பதையும் அறிந்து மகிழ்தல் கூடும்.

சங்க காலத்தின் தொடக்கப்பகுதியில் பெரும்பகுதி வாழ்வியல், அரசு சார்ந்தும் சிறுபகுதி இறைவனை நோக்கியும் இறைவன், ஆடுவார் மீது இவர்ந்திருப்பன் எனக் கருதியும் (வெறியாட்டு) ஆடல்கள் நிகழ்ந்தன. சங்க காலத்தின் இறுதியிலும் சங்கம் மருவிய காலமான காப்பியக் காலத்திலும் இறைவனே ஆடுவான் எனும் கருத்து மக்களிடையே தழைத்தது. பாண்டரங்கம், கொடுகொட்டி, காபாலம் முதலிய ஆடல்களைச் சிவபெருமான் நிகழ்த்தினார் எனவும் குடக்கூத்து, மல்லாடல் ஆகியவற்றைத் திருமால் ஆடினார் எனவும் அவர்கள் நம்பினர்.

மக்கள் ஆடிய பேடியாடல், துடியாடல் முதலிய பல ஆடல்வடிவங்கள் இறையோடு தொடர்புடைய ஆடல்களாக முத்திரை யிடப்பெற்றன. வாழ்க்கை நிகழ்வுகளைப் பகிர்ந்தும் மரபின் பெருமைகளைப் புகன்றும்

இறையருள் வேண்டியும் மக்கள் ஆடலாய் நிகழ்ந்த சங்கக் குரவை, காப்பியக் காலத்தில் வாழ்க்கைப் பகிர்வுகளின் பின்னணியில் இறைநோக்கிய, இறை பற்றிய ஆடலாக மாறியது. பத்திமைக் காலத்தில் இந்நிலை தொடர்ந்திருக்கலாம் எனினும், இதனின்றும் முற்றிலும் மாறுபட்ட நிலையாக இறைவனை ஆடல்நாயகனாகக் காண்பதும் அவரது ஆடலைப் பாடுவதும் அதற்கான களங்களையும் கருவிகளையும் கலைஞர்களையும் அடையாளப்படுத்துவதுமே முதன்மை பெற்றது. சிவபெருமானே ஆடல் தெய்வமாகக் கொள்ளப்பட்டதற்கானச் சான்றுகள் சம்பந்தர், அப்பர் திருமுறைகளில் விரவியுள்ளன.



புயங்கராக மாநடம் (புஜங்கத்ராசித கரணம்) – சீயமங்கலம் குடைவரைக் கோயில்.

## இறையாடல்

சிலப்பதிகாரத்தில் பதினோராடல்களில் ஓர் ஆடலுக்கு மட்டுமே உரிமையுடையவராகக் காட்டப்படும் சிவபெருமான் ஆடல்நாயகராக உயர்த்தப்பட்ட காலம் பத்திமைக்காலம். சம்பந்தரும் அப்பரும் திருமூலரும் காரைக்கால் அம்மையும் பல கோணங்களில் இறையாடல் நிகழ்வுகளை வர்ணனை செய்து சிவபெருமானை ஆடல் தலைமைக்கு அழைத்துச் சென்றனர். ஆடல்நாயகரின் ஒப்பனை, தோற்றம், ஆடலமைவுகள், ஆடலின்போது அவர் ஏந்தியிருக்கும் பொருட்கள், ஆடலுக்கான இசை, அதையெழுப்பிய கருவிகள், அக்கருவிகளை இயக்கியவர்கள், ஆடலுக்கான பாடல், அதைப் பாடியவர்கள், உடனிருந்தவர்கள், மகிழ்ந்து நோக்கியவர்கள், இணைந்தாடியவர்கள், ஆடிய போதுகள், ஆடற்களம் எனப் பல சுவையான செய்திகளை இப்பெருமக்களின் பாடல்கள் பதிவுசெய்துள்ளன.

முன்னெப்போதும் இருந்திராத, முந்து இலக்கியங்களில் காணப்பெறாத இச்செய்திகள் திடீரெனத் தோன்றி யிருக்கமுடியாது. தொன்மங்களுடன் மிடைந்த நிலையில், மக்களிடையே வழங்கிவந்து, காலநடையில் செம்மை பெற்றே இத்தகு விதந்தோதல்கள் விரிவு பெறுகின்றன. எனில், இத்தனை பரந்துபட்ட கோணங்களில் இறையாடல் குறித்த பல்வகைச் செய்திகள் பதிகங்களில் பதிவாகிடக் குறைந்த அளவில் ஒரு நூற்றாண்டேனும் ஆகியிருக்கலாம் எனக் கொள்வோமாயின், ஆடலை சிவபெருமானுடன் இணைத்து இரசித்துப் போற்றிய நிலையும் அது தொடர்பான

விரிவுகளை நோக்கிய சிந்தனைகளும் பார்வைகளும் பொ. கா. 5ஆம் நூற்றாண்டிலேயே சமூகத்தளங்களில் ஆழ வேர்விட்டதாகக் கருத இடமுண்டு.

சிவபெருமானின் ஆடலை மாநடம், பெருநடம், நட்டம், நிருத்தம், சொக்கம், நாடகம் எனப் பலபடப் பிரித்துப் பேசும் பத்திமை இலக்கியங்கள், இறைவனின் ஆடலியல்பை வெளிப்படுத்த அவரைக் கூத்தாடும் குணத்தோன் என்பதுடன், ஆடுவதைத் தொழிலாகக் கொண்டவராகவும் அடையாளப்படுத்துகின்றன. ஆடுவதாகவும் ஆடலைப் பயில்வதாகவும் பயின்று ஆடுவதாகவும் பலப்பல நிலைகளில் இறையாடலைக் காட்டும் இப்பெருமக்கள், பாடலையும் இறைவன் பயின்று ஆடியதாகக் கூறுவதுடன், அவரை ஆடல்வல்ல அடிகள் என்றும் போற்றுகின்றனர். ‘ஆடல் அழல்நாகம் அரைக்கு இட்டு அசைத்தாடப் பாடல் மறைவல்லான் படுதம் பலி பெயர்வான்’ எனச் சொல்லிப் பலிகேட்டுப் போகும் போதே, இறைவன் கூத்தாடியாகச் சென்ற கோலம் காட்டுகிறார் சம்பந்தர்.

இறைவனின் எட்டு வீரச்செயல்களுள் ஒன்றான முப்புர எரிப்போடு ஆடலை இணைத்துப் பேசும் சம்பந்தர், ‘மூவெயிலும் எரியுண்ணக் கூரெரி கொண்டு எல்லி ஆடலன்’ என்பார். இதற்குப் பொருள் கூறும் உரையாசிரியர், இறைவன் தீப்பிழம்பில் நின்றாடியதாகச் சொல்கிறார். இதையே அப்பர் பெருமான், ‘துஞ்சடை இருள் கிழியத் தூங்கெரி ஆடுமாறே’ என்பார்.

கோயில்களில் காணக்கிடைக்கும் பெரும்பாலான ஆடல்வல்லான் படிமங்களைச் சுற்றிலும் காணப்படும் திருவாசிகளில் தீச்சுடர்கள் காட்டப்பட்டுள்ளமை, வார்ப்பறிஞர்கள் இப்பதிக அடிகளில் கொண்டிருந்த புரிதலை வெளிப்படுத்துவதாகக் கொள்ளலாம். அழல்வண்ணனாக வண்ணனை செய்யப்படும் இறைவன் செந்தீயில் ஆடுவதும் தீயைக் கைக்கொண்டு ஆடுவதும் வாழ்வியல் தத்துவங்களின் குறியீடாக முன்வைக்கப்படுகின்றன.

## அரங்கு

தெருக்களையும் மன்றுகளையும் மரத்தடிகளையும் ஆடல் அரங்காகக் கொண்டிருந்த சங்க காலத்திலேயே அரசவைகளில் பல்லோர் இருந்து காண வல்ல பாங்கான அரங்குகள் இருந்தமை பதிற்றுப்பத்தால் தெரியவருகிறது. சிலப்பதிகாரம் அரங்கம் பற்றிய பல முதன்மைத் தரவுகளைத் தருகிறது. அரங்கம் இல்லாமல் ஆடல் இல்லை. அழிக்கும் கடவுளான சிவபெருமானின் அரங்காகக் காடு அமைகிறது. காரைகள், கூகை, முல்லை, களவாகை, ஈகை, படர்தொடரி, கள்ளி, சூரை இவை பம்மி விம்மும் இடுகாடாகவும் சுடுகாடாகவும் அமைந்த இறைவனின் இந்த ஆடரங்கு படுகாடு, முதுகாடு, புறக்காடு, கரிக்காடு, வெங்காடு, பெருங்காடு, ஈமக்காடு, பிணக்காடு, சுள்ளிக்காடு எனப் பல அடைகளுடன் சிறப்பிக்கப்படுகிறது. மயானம், ஈமவனம் என்றெல்லாமும் குறிக்கப்படும் இக்காட்டரங்கில்

இறைவனது ஆடல்மேடை வெய்தாய சுடலையாம். அதில் கொழுந்துவிட்டெரியும் தீயில்தான் இறையாடல் இனிதே நிகழ்கிறது. வாழ்க்கையின் முடிவையும் அதன் நிலையில்லாத் தன்மையையும் அடையவேண்டியது எது என்ற உண்மையையும் சுட்டிக்காட்டும் இத்தீநடம் நடைபெறும் காட்டை, அதாவது, இறைவனின் ஆடல் அரங்கைப் பதிகங்கள் பலபட வண்ணிக்கின்றன.

எரியும் சிதையையும் அதன் கொளுத்தும் கனலையும் அதனால் கரியும் காலையும் பொருட்படுத்தாது, வேகும் உடலிலிருந்து குடலைத் தேர்ந்துகொள்ளும் பேய்கள் சில, உணவு கிடைத்த மகிழ்வில் ஆடிக்களிக்கும் அரங்கம் அது. பிறை போல் வளைந்த பல்லும் பறை போல் குழிந்த கண்ணும் பேழாய்ப் பிளவாய் அகன்ற வாயும் கொண்ட இப்பேய்களுள் சில ஒன்றாய்க் கூடி முழவுகள் தேர்ந்து கொட்டத் தொடங்கிடத் தாளம் சேரும் அந்த அதிசய அரங்கில், நரிகள் கால்பந்தாடுகின்றன. அவை உண்டு எஞ்சிய தலைகளே பந்துகளாம். அங்குமிங்குமாய் அந்த அரைகுறைத் தலைகள் வாழ்வாரைப் பார்த்து நகைப்பது போல உருளும் சூழலில், பேய்களின் முழவுக்குப் பந்தாடும் நரிகள் குழலிசை சேர்த்தன. குறுநரிகளாக இருந்த போதும் அவை வாசித்தவையோ நீடுகுழல்கள். கருவியெடுத்து இசையெழுப்பும் தேவை யின்றிக் கண்டத்திலேயே கருவி கொண்ட கலைஞர்கள் போல் அவை வாய்திறந்தால் போதும் இசைமுழக்கம்தான். ஒரு நரிக்கே காடு தாங்காது. ஆனால், அப்பர் குறுநரிகள் பல கூட்டமாய்க் கூடித் தொடர்ந்து குழலிசைத்ததாய்ப் பாடுகிறார். அதனால்தானோ என்னவோ, பூமியே நெளிந்தது.

எரியும் சுடலையிலிருந்து பேய்கள் உருவிடும் கொள்ளியே இறையாடலுக்கான அரங்க விளக்காகிறது. தீயாடும் தீவண்ணனைப் பார்க்கப் பேய் உருவிய கொள்ளி விளக்காகுமா? ஆகும் என்கிறது பதிகம். ‘பேயுயர் கொள்ளி கைவிளக்காகப் பெருமானார் தீயுகந்தாட.’ இந்த எரிகள் இல்லாதும் இறைவன் ஆடுவதுண்டு. அதுபோது களத்திற்கு ஒளியூட்டப் பொன்தீ மணி விளக்குகளைப் பூதங்கள் தூக்கி நிறுத்தின. நாடகத்தின் தொடக்கத்தில் கட்டியங்காரன் பாடுவதைப் போல், இறையாடலுக்கு முன்னால் இக்குள்ளச்சிறு பூதங்கள், நால்வகை இசைக்கருவிகளும் இசைத்தவாறே அரங்கில் குறுநடை பயின்று பார்வையாளர்களை இறையாடலுக்குத் தயார்படுத்தும். சில பூதங்கள் குழலும் கொக்கரையும் ஊதிப்பார்க்க, வேறு சில அரங்கம் ஆடலுக்கு உகந்ததாக உள்ளதா எனத் தாளம் தவறாமல் ஆடியும் பார்க்கும். தங்கள் பங்கிற்குப் பேய்களும் வெள்ளோட்டம் காணும். ஆடியும் இசைத்தும் பாடியும் அரங்கத்தின் ஒலியமைவு, உறுதி தேரும் பூதங்களும் பேய்களும் ஆடல்நாயகராம் இறைவனின் பிரிக்கவியலாத்துணைகள். அதனால்தான், பிணக்காட்டில் பேயோடு ஒன்றுபவராகவும் பூதநாதராகவும் இறைவனை அப்பர் படம்பிடிக்கிறார்.

பல்வேறு பதிகங்களில் ஆடுகளமாய்க்

காட்டை வண்ணிக்கும் திருமுறை ஆசிரியர்கள் அவ்வப்போது நாட்டுக்களமாய்த் தில்லையையும் காட்டுகின்றனர். அணியார் தில்லை, மஞ் சடை சோலைத் தில்லை, சிறைகொள் நீர்த்தில்லை என்றெல்லாம் தில்லையைப் பெருமைப்படுத்தும் அப்பர், 'ஞாலமாம் தில்லை தன்னுள் நீலஞ்சேர் கண்டனார்தாம் நீண்டெரி ஆடுமாறே' எனப் பாடித் தில்லையை ஞாலமாக்கி நாட்டரங்கின் சிறப்பை சிகர உச்சிக்கு ஏற்றுகிறார்.

இறைவன் பொற்பாதம் தூக்கி ஆடியதாலேயே ஞாலமான தில்லையில், அந்தப் பெருநடம் நிகழ்ந்த அம்பலம் அணியம்பலமாகவும் மணியம்பலமாகவும் வண்ணிக்கப்படுகிறது. இறைவன் தாமே விரும்பித் தமக்கு அணுக்கமானவர்கள் சூழத் தாம் கிளர்ந்தெழும் நேரங்களிலெல்லாம் ஆடி மகிழ்ந்த இடமாதலால் அவர்க்கு உகந்த காட்டரங்கைப் பேரம்பலமாய்க் கொள்ளலாம். அதனால்தான், அதைப் பெருங்காடென்றும் அங்கு ஆடும் இறைவனைக் காட்டில் நின்றாடல் பேணும் கருத்தினை உடையவர் என்றும் இட்டமாய் இடுகாட்டு எரியாடுவார் என்றும் அப்பர் பாராட்டி மகிழ்கிறார். கேட்டாருக்கு ஆடிய இடமாதலால், கேள்விக்கு இரங்கிய நிலை என்பதால் தில்லையம்பலம் சிற்றம்பலமானது. அப்பர் தில்லையம்பலத்தைச் சிற்றம்பலமென்றே குறிக்கிறார்.

*(தொடரும்)*

# திருமந்திரம்

அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்
இடப்பக்க மேஇறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே.

**விளக்கம்:**

நல்ல ருசியாக உணவினை சமைத்து உண்டார். கொடி போனற அழகான பெண்களுடன் உறவு கொண்டார். இடப்பக்கம் வலிக்கிறது என்று சொல்லியவாரே படுத்தார். அப்படியே இறந்து விட்டார்.

சுகவாசியான அவர் நல்ல வகை வகையான சாப்பாடு. அழகான பெண்கள் என்று வாழ்க்கையை அதிலேயே செலவு செய்தார். திடீர்னு ஒரு நாள் நெஞ்சு வலி என்று படுத்தார். படுத்தவர் படுத்தவர்தான், அப்படியே செத்து போனார். வாழ்வின் நிலையின்மையை புரிந்து கொண்டு இளமையிலேயே இறைவனை நாடுவோம்.

****************

ஆர்க்கும் இடுமின், அவர் இவர் என்னன்மின்
பார்த்து இருந்து, உண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை உடையீர் விரைந்து ஒல்லை உண்ணன்மின்
காக்கை கரைந்து உண்ணும் காலம் அறிமினே.

**விளக்கம்:**

தகுதி உடையார், தகுதி இலர் என வேற்றுமை செய்யாது யார்க்கும் தானம் செய்க. விருந்தினர் வருகையை எதிர்பார்த்துக் காத்திருந்து உண்க. பழைய உணவைப் பாதுகாத்து விருந்தாளிக்கு அளிக்க வேண்டா. உணவு விருப்பம் கொண்டு விரைந்து தமியராய் உண்ணற்க. காக்கையும் உண்ணும் காலத்தில் தன் இனத்தைக் கரைதலை அறிக.

# வைராக்கிய சதக தொடர் – 4





தமிழாகரர் **தெ. முருகசாமி**
(மேனாள் முதல்வர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

## தவத்திரு சாந்தலிங்க சுவாமிகள்

உலக உயிர்க்கூட்டத்தில் மனிதனைத் தனித்து அடையாளப்படுத்தும் “மனம்” என்பது ஓர் அதிசயப்பொருள். அதிசயம் போன்றதாகவே அற்புதம் என்ற சொல்லும் உண்டு. இரண்டும் வேறு வேறான பொருள் உடையன ஆகும்.

உள்ளதன் புதுப்புது முகிழ்ப்பே அதிசயம். இல்லாத ஒன்று கிளைப்பதில்லை. இருப்பதே கிளைக்கும்.

இல்லதற்கு இல்லை பெயர் என்பது பழமொழிநானூற்றில் ஒருமொழி. இல்லாததற்குப் பெயர் வைக்க முடியாது என்பது போல இருக்கின்ற மனம்தான் உடல் வளர்ச்சிக்கேற்ப வளர வளர பல அனுபவங்களைப் பெறும்.

இந்த அடிப்படையில்தான் மணிவாசகர் அடியாரில் கூட்டிய அதிசயம் கண்டோமே! என அதிசயப்பத்தும் பாடினார். இதன் இறுதிப்பாட்டில் மெய்ந்நெறி, பொய்ந்நெறி நீக்கிய அதிசயம் கண்டோமே என்பதால் ஆன்மாவோடே (மனத்தோடே) பயணித்த மெய், பொய்களை நீக்கிய நிலையில் அருளிய முத்திதான் அதிசயத்தால் விளைந்த பலன்.

ஆனால் இந்த அதிசயத்திற்குச் சற்று மாறானது அற்புதம். தோன்றி மறைந்து வருகின்ற மின்னல் போன்ற வியப்பை உணர்த்துவது அற்புதம். இதையும் மணிவாசகர் அற்புதப்பத்தாகப் பாடிக் காட்டியுள்ளார். நானேயோ தவம் செய்தேன் என்றதொரு பாடலில் தானே வந்து என்

உள்ளம் புகுந்து என்றதாகக் கூறிய கருத்து அற்புதமானதாகும்.

இத்தகு அதிசய அற்புத உலகத்தில் எதைப் பிடித்துக்கொள்வது எதைவிடுவது என்ற தடுமாற்றத்தில் மனம் தளராமல் இந்நூல் வைராக்கிய சதகம் என்பதால் அது இது என்ற (இருவிதமான) பாவனையை நீக்கி எல்லாம் சிவமயம் என்பதை உணர்த்துவதால் "அகற்றுதி துவித பாவனை நெஞ்சே!" (25) எனச் சாந்தலிங்கர் நெஞ்சிற்கு ஓர் சமரசஉணர்வைச் சாந்தமாகக் கூறினார்.

அடுத்து அது, இது எனச் சலனப்படும் துவித பாவனையைக் குருவானவர் காட்டும்போது சும்மா இருத்தலான மௌனமாம் நிட்டைதான் ஆன்மா பலன் பெறுதலுக்கான தீர்வு என்கிறார் சாந்தலிங்கர்.

அந்தநிட்டைஎன்பதற்கானவிளக்கத்தைக் கூறுங்கால் இவ்வுடம்பினைச் சித்திரத்தில் எழுதி வைக்கப்பட்ட தீபம் போல் ஞானசமாதியில் அசைவின்றி ஆசனம் இட்டு அமர்த்தல் ஆகும் என்றார் சாந்தலிங்கர்.

*இவ்வுடல் சமாதியில் அசைவறச் சித்திர தீபம் போல் சாரன வைத்திடு*

என்று அறிவானது மனத்திற்கு ஆணை யிட்டது. இட்ட ஆணையின்படி மனம் நிலைத்து நிற்குமா? என்றால் நிற்காது என்பதே இயல்பு என்கிறார் சாந்தலிங்கர். அதற்கான உதாரணம் கூறுகையில், தாய் ஒருத்தி தன் குழந்தையைச் சீராட்டி மலர்ப்படுக்கையில் தூங்கவைத்தாலும் குழந்தை தனக்கே உரிய பாவனையால் சும்மா இருக்க மாட்டாமல் படுக்கை யிலிருந்து இறங்கி வெளியே ஓடித் திரியவே விரும்பும். அதுபோல மனத்தைச் சும்மாஇரு என்றால் இருக்காமல் தாவும் உணர்வில் நிட்டை கூட மறுக்கும் என்பதைக் கீழ்வரும் பாடலால் உணரமுடிகிறது!.

*நெஞ்சே! நீ மெய்ஞ்ஞான நிட்டை சாருதல் அரிது! சேய்கள் தம் இனத்தாய் கொல்*

சும்மா இருத்தல் செயற்கு அரிதாகிவிடும் என்பதால் போகத்தை நீக்கி யோகத்தைக் கொண்டு நாளும் கொள்ளும் பயிற்சி அனுபவத்தால் உயிர் நீங்கும்போது சிவனடியே சிந்திக்கும் பேற்றால் உயிர் முத்தியடையும் என்கிறார் சாந்தலிங்கர். இங்ஙனம் இன்றேல் காக்கை போல் கத்திக்கத்தி நாசம் அடையாதே நெஞ் சே! என நெஞ்சைப் பக்குவப்படுத்தினார்.

*வாழலாம் அறன்புகழ் இடைமலர் கவி*
*மாலை செய்து அவன் தாளில்*
*வீழுமாறு பொன் இதழிசேர் தோள்களின்*
*மீது அணிந்து இனிநெஞ்சே!*
*தாழுவாய்! அரிதேரு பொற்சரணமே*
*சரணம் என்று! இதுவன்றி*
*பாழிலே கரும்நாக்கை போல்*
*கதறி நாள்பல கழித்து ஒழியையே!*

என்பது சாந்தலிங்கர் வாக்கு. இப்பாடலில் சாந்தலிங்கர் கூறும் ஓர்

உவமையும் ஓர் அறிவுறுத்தலும் மிகமிகச் சிந்தனைக்குரியனவாகும். புல்லிய பறவையான காக்கைக்கு நற்குணம் இருக்காது. சுடுகாட்டைச் சுற்றிப் பறந்து பிணத்தைத் தின்னும் பழிப்புக்கு உரியது காக்கை என்பதால்தான் "முதுகாட்டில் காக்கை உரிக்கும் பிணம்" என்று ஔவையாரின் நீதிநூல் கூறும். அதுபோல வீணே நெஞ்சே! காலத்தை அவமே போக்காமல் திருமால் காண விழைந்த சிவனது திருவடியே சரணம் (அடைக்கலம்) என நிட்டை கூடியிருந்தால் முத்தி கிட்டும் என்பதுதான் ஆன்மா பெறும் பலன் என்பதாகச் சாந்தலிங்கர் அறிவுறுத்தினார். இந்த அறிவுறுத்தலை நம்பு என அறிவு (ஞானம்) நெஞ்சுக்கு நீதி சொல்வதாய், வைராக்கிய சதகத்தை நிறைவு செய்கிறார்.

*விருப்பமாய் இதுகேட்டி நல்நெஞ்சமே!.....*
*அறன் தொழும்பர் தம்தொழும்பனாய்த்*
*திரிந்து அவர்பணி செய்து ஈண்டு*
*இருப்பையேல் மிகநல்லை! இச்சொல்லை நம்பு!*

ஆக அறிவும் மனமும் உரையாடுவது போன்ற சாத்திர நிலையில் இந்த வைராக்கிய சதகத்தைப் பாடி முடித்தார் சாந்தலிங்கர் என்பது இக்கட்டுரையின் சாரமாம் என்க!

(இனி வைராக்கிய சதகத் தோத்திரம் தொடரும்)

*(தொடரும்)*

# திருமந்திரம்

எட்டி பழுத்த, இருங்கனி வீழ்ந்தன,

ஒட்டிய நல்லறம் செய்யார் – அவர் செல்வம்

வட்டிகொண்டு ஈட்டியே மண்ணில் முகந்திடும்

பட்டிப் பதகர் பயன் அறியாரே.

**விளக்கம்:**

உயிருடன் ஒட்டிச் செல்லும் நற்பயனைத் தருவதாகிய நல்லறத்தைச் செய்யாதாரின் செல்வம், எட்டி மரத்தில் பழம் பழுத்துக் கீழே விழுந்து கிடப்பனவற்றை யாரும் உண்ணாமையே போலப் பயனற்றதாகும். ஆனால் அதைப் பட்டிமாடு போன்ற பாவிகள் வட்டியிட்டு வாரிக் கொள்வர் என்ற முடிவை அச்செல்வர் அறியார். நல்லோர்க்கு உதவாத செல்வத்தைத் தீயோர் கொள்ளையிட்டுச் செல்வர்

****************

இன்பம் இடர் என்று இரண்டுஉற வைத்தது

முன்பு அவர் செய்கையினாலே முடிவதும்

இன்பம் – அது கண்டும் ஈகிலர் பேதைகள்

அன்பு இலார் சிந்தை அறம் அறியாரே.

**விளக்கம்:**

ஒருவர் அடையும் இன்பமும் துன்பமும், முற்பிறவியில் அவர் செயல்களின் பயன் ஆகும். அறச் செயலின் பயன் இன்பம். பிற செயலின் பயன் துன்பம். இன்பம் விளைவதைக் கண்டும், அன்பு இல்லாதவராய், அறம் செய்யாமல் சில பேதைகள் வாழ்கின்றனர்.

# மாணிக்கவாசகரும் - திருவாசகமும்

**சென்ற இதழ் தொடர்ச்சி**



**இராமநாதன் பழனியப்பன்,**
**சென்னை**

*“இந்நகர் வணங்கி நீங்கி எழும் கழுக்குன்றம் என்னும்*
*அந்நெடும்பதியில் இறைஞ்சி யாண்டு நின்ற ஈண்டுப்போந்து*
*பொன்னின் அம்பலத்தில் எய்திப் புத்தரை வாதில்வென்ற*
*பி,ன்னர் எம்பதமே யானபெரும் பதம்பெறுதி!” என்றார்*

திருக்கழுக்குன்றம் செல்லும் வழியில் திருஆரூர் சென்று அவ்வூர் இறைவன் திருமுன் திருப்புலம்பல் பாடினார். இங்குதான் நாம் அடிக்கடி கேட்கும் பாடல் பாடப்பெற்றது.

*உற்றாரை யான் வேண்டேன்; ஊர் வேண்டேன்;*
*பேர் வேண்டேன்;*
*கற்றாரை யான்வேண்டேன்; கற்பனவும் இனிஅமையும்;*
*குற்றாலத்து அமர்ந்து உறையும் கூத்தா!*
*உன்குரை கழற்கே*
*கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே*

அதன்பின்னர் சீர்காழியை அடைந்து தோணியப்பரைத் தரிசித்துப் பிடித்தப்பத்து பாடி அருளினார். பின்னர் திருமுதுகுன்றம், திருவெண்ணெய் நல்லூர் தலங்களைத் தரிசித்து, திருஅண்ணாமலை அடைந்தார்.

*அன்றிருவர் தேட அழல் ஆனதொரு வெற்பாய்*
*நின்ற வடிவோ மனநிறைந்த பெருவாழ்வோ?*
*என்றுமலை அண்ணலை இறைஞ்சி அருள்கொண்டே*
*சென்று அருணை ஆகிய செழும்பதி புகுந்தார்*

இத் திருஅண்ணாமலைத் திருத்தலத்தில் தான் திருவெம்பாவையையும், திருஅம்மானையையும் பாடி அருளினார். திருவாசகத்தில் மிக முக்கியமான, பல நல்ல கருத்துக்கள் கொண்ட பாடல்களில் ஒன்று திருவெம்பாவை. அதிலிருந்து ஒரு பாடலை நினைவு கூர்கிறேன்.

ஆதியும் அந்தமும் இல்லா....

அம்மானையிலிருந்து ஒரு அழகுமிகு பாடல்!

*பண் சுமந்த பாடல் பரிசு படைத்தருளும்*
*பெண் சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்*
*விண் சுமந்த கீர்த்தி வியன் மண்டலத்து ஈசன்*
*கண் சுமந்த நெற்றிக் கடவுள் கலி மதுரை*
*மண் சுமந்து கூலிகொண்டு அக்கோலால் மொத்துண்டு*
*புண் சுமந்த பொன் மேனி பாடுதுங்காண் அம்மானாய்!*

மாணிக்கவாசகருக்காகச் சொக்கேசர் பட்ட பாட்டினை இப்பாடலில் பாடியுள்ளார். அங்கும் அவருக்குப் பெருமானின் திருக்காட்சி கிட்டியது.

அடுத்துக் காஞ்சிபுரம். அத்தலத்தில் தரிசனம் செய்தபின் பெருமான் சொல்லியிருந்தபடி திருக்கழுக்குன்றம் அடைந்தார். பெருமானும் முன்னர் கூறியபடி குருநாதர் வடிவில் தரிசனம் கொடுத்து அருளினார்.

நிறைவாக, சிவலோகம் போல அவருக்குக் காட்சி கொடுத்த திருத்தில்லை அடைந்தார். திருவீதிகளைக் கடந்து வடக்குத் திருவாயில் வழி திருக்கோயிலுக்குள் சென்றார். சிவகங்கையில் நீராடினார். வலமாகச் சுற்றிச் சிற்சபையில் எழுந்தருளி இருக்கும் ஆனந்தநடராசப் பெருமானை உளம் நெகிழ்ந்து வணங்கினார். குருநாதனாக வந்து காட்சிகொடுத்து ஆட்கொண்ட பெருமானைச் சிற்றம்பலத்தில் கண்டு தரிசித்துப் பேரானந்தம் கொண்டார். பல பாடல்களை இங்குப் பாடி அருளினார். கண்ட பத்திலிருந்து ஒரு பாடல்!

*பத்திமையும் பரிசும் இலாப் பசு பாசம் அறுத்தருளி*
*பித்தன் இவன் என என்னை ஆக்குவித்து பேராமே*
*சித்தம் எனும் திண் கயிற்றால் திருப்பாதம் கட்டுவித்த*
*வித்தகனார் விளையாடல் விளங்கு தில்லை கண்டேனே!*

எண்ணப் பதிகத்திலிருந்து ஒரு பாடல்!

*பத்துஇலன் ஏனும் பணிந்திலன் ஏனும் உன் உயர்ந்த பைங்கழல் காணப்*
*பித்து இலன் ஏனும் பிதற்றிலன் ஏனும் பிறப்பு அறுப்பாய் எம்பெருமானே*
*முத்து அனையானே மணி அனையானே முதல்வனே முறையோ என்று*
*எத்தனையானும் யான் தொடர்ந்து உன்னை இனிப் பிரிந்து ஆற்றேனே*

அங்கிருந்து சில திருத்தலங்களைத் தரிசித்த பின்னர் மீண்டும் தில்லைக்கே வந்து அங்கே தங்கி தினமும்

ஆனந்தநடராசரின் தரிசனம் கண்டுகொண்டிருந்தார்.

அவ்வமயம் தில்லைக்கு ஈழநாட்டிலிருந்து புத்த ஆச்சாரியார் சிலர் தம் அரசனுடன் சைவத்தை வென்று புத்தரே கடவுள் என்று நிலைநாட்ட வந்திருந்தனர். அரசன் தன் ஊமைப்பெண்ணையும் உடன் அழைத்து வந்திருந்தார். செய்தி கேட்ட தில்லைவாழ் அந்தணர்களும் சோழமன்னனும் திகைத்துப்போய் இருந்தனர். “தில்லைமருங்கில் இருக்கும் தவயோகியை அழைத்து வந்து வாதம் புரியச்சொல்லுங்கள்!” என்று அசரீரி எழுந்தது. அந்தத் தவ யோகியாராகிய மணிவாசகர் வந்தார். வாதம் நிகழ்ந்தது. தொடர்ந்தது. ஆனால் நிறைவு பெறவில்லை. பின்னர் மணிவாசகர் வேண்ட வாதிட வந்த புத்தகுருமார்கள் அனைவரும் ஊமைகளாயினர். தோல்வியை ஏற்றுக் கொண்ட ஈழமன்னன் “பேசியவரை ஊமைகளாக்கிய உங்களால் ஊமையாக இருக்கும் என்மகளைப் பேசவைக்க இயலுமா?” எனக் கேட்டார். அப்பொழுது மாணிக்கவாசகர்




பாடியதுதான் கேள்வியும் பதிலும் அடங்கிய திருச்சாழல். கேள்வி கேட்டவர் மணிவாசகர். பதில் தந்தது அதுவரை ஊமையாய் இருந்து வாக்குவன்மை பெற்ற ஈழத்து மன்னன் மகள்.

மணிவாசகர் மீண்டும் தம் குடில் அடைந்து தியானத்தில் அமர்ந்தார். அவ்வமயம்தான் பெருமானே அந்தணராய் உருவெடுத்து அவரை அணுகி, அவர் பாடிய திருவாசகத்தினை மீண்டும் பாடவைத்துத்

தம்திருக்கரங்களாலே ஏட்டில் எழுதிக் கொண்டு மணிவாசகரிடம் “பாவை பாடிய வாயால் கோவை பாடுக!” என்று பணித்துச் சென்றுவிட்டார். மணிவாசகரும் அதற்குப் பின் திருக்கோவையாரைப் பாடி நிறைவு செய்தார்.

அதுசரி! படி எடுத்த ஏடு என்னவாயிற்று? பெருமான் “மாணிக்கவாசகன் சொல்லத் திருச்சிற்றம்பலமுடையான்” கையெழுத்து என்று கைச்சாத்து இட்டு சிற்சபையின் பஞ் சாக்கரப்படிகளில் வைத்த பின் மறைந்து விட்டார். மறுநாட் காலை வந்த தில்லைவாழ் அந்தணர் ஏட்டினைக் கண்டு எடுத்துப் படித்து மணிவாசகரை அழைத்து வந்து பொருள் கேட்க, அந்தச் சிற்றம்பலம் உடையானே பொருள் என்று சொல்லி அம்பலத்தினுள் தோன்றிய பேரொளியினுள் சென்று அத்துடன் ஐக்கியமாகிவிட்டார்.

நிறைவாக ஒரு செய்தி! பெருமான் ஏன் தனக்கெனத் திருவாசகத்தின் பிரதி ஒன்றினை எழுதிக் கொண்டார்? பதிலுக்கு மனோன்மணியம் சுந்தரனாரிடம் செல்வோம்!

*கடையூழி வரும் தனிமை கழிக்கவன்றோ அம்பலத்துள்*
*உடையார் உன் வாசகத்தில் ஒருபிரதி கருதினதே!*
*திருவாசகமே ஆடல் வல்லானின் அருட்கூத்து,*
*அருட்கூத்தே திருவாசகம்!*

*தேவர் குறளும், திருநான்மறை முடிவும்*
*மூவர் தமிழும், முனிமொழியும் திருகோவை*
*திருவா சகமும், திருமூலர் சொல்லும்*
*ஒருவாசகம் என்று உணர்!*

திருச்சிற்றம்பலம்!

*தென்னாடுடைய சிவனே போற்றி!*
*எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!*

திருநெல்லை இதழுக்கான ஆன்மிகப் படைப்புகள் வரவேற்கப்படுகிறன. திருநெல்லை (இணைய இதழ்), கோவிலூர் மடாலயம், கோவிலூர் என்ற முகவரிக்கு அஞ்சலிலோ அல்லது நேரிலோ தங்கள் ஆக்கங்களை அன்பர்கள் அளிக்கலாம்.

# நல்லன எல்லாம் தரும் சுந்தர காண்டம்

**பகுதி-2**



**முனைவர் சரசுவதி இராமநாதன்,**
பள்ளத்தூர்

இருநூற்று முப்பத்து நான்கு பாடல் கொண்ட ஊர் தேடு படலம் அடுத்து வருகிறது. சீதையைத் தேடி இலங்கை வந்த அனுமன் அரக்கரது செல்வச் செழிப்பு, மகிழ்ச்சி, இவற்றைப் பார்த்து வியக்கிறான். மரமெலாம் கற்பகமரங்கள், மனை எல்லாம் தங்கம், தேவலோக மங்கைகள் அரக்கியருக்கு வேலைக்காரிகள். அரண்மனை கூட்டும் வேலை செய்கிறார்களாம் தேவமங்கையர். தேவலோகத்துப் பெண் சாதாரண விளக்குமாறு கொண்டு பெருக்குவாளா? மின்னல் கொடியைப் பிடித்து ஒடித்து மனைகளைப் பெருக்கினார்களாம். ஆகாயகங்கை நீரால் வாசல் தெளித்தார்களாம். பளிங்கு மாளிகையில் அரக்கர், அரக்கியர் இன்புற்றுக் களித்து வாழ்ந்தனர். இலங்கையில் எல்லா வசதிகளும் இருந்தன. என்றாலும் ‘‘கதிரவன் ஒளிபுகா, மறலி மறம் புகா, இலங்கையில் அறம் புகாது’’ என இலங்கையில் இல்லாதனவும் இருந்தன என்றாலும் கதிரவனின் மிக்க ஒளி, எமனின் வீரம், இலங்கையில் அறம் ஆகியன மட்டும் புகவில்லை என்கிறார் கம்பர்.

அனுமன் உடம்பைச் சுருக்கி அமைத்து, இலங்கையைக் கண்டான். அணிமா, மகிமா, கரிமா என்பதெல்லாம் சித்து. அணுப்போல் உடலைச் சுருக்கிக் கொள்ளல் அணிமா. பேருரு எடுத்தல் மகிமா. இராம நாமத்தினால் அனுமன் இவ்விரண்டையும் பெற்றான். அஷ்டமா சித்திகளையும் பெற்றான். இலங்கையைப் பார்த்த அனுமன் அந்நாட்டில் நுழைய முயன்றான்.

## இலங்கினி தடுப்பும், அனுமன் வெற்றியும்

இலங்கையின் காவல் தெய்வம் இலங்கினி. அவள் அனுமனை இலங்கைக்குள் நுழையவிடாது தடுத்தாள். ‘‘ஆர் சொல வந்தாய்! உனது ஆவிபோம்! ஓடலை’’ என்று அவள் அவனை அதட்டினாள். அனுமன் பணிவுடன் ‘‘நான் இலங்கையைப் பார்த்தே செல்வேன்’’ என்றான். அவனை எதிர்த்தாள் இலங்கினி. அனுமன் ஓர் அறை தந்தான். அவள் விழுந்தாள்.



'முரண் வலிக் குரங்கு ஒன்று உன்னை அறைந்து தள்ளும். அப்போது இலங்கைக் காவலை விட்டு வந்துவிடு" என நான்முகன் சொன்ன சொற்கள் அப்போது அவள் நினைவுக்கு வந்தன. ''அறம் வெல்லும். பாவம் தோற்கும். நீ நினைத்தது வெற்றியாகும்" என்று இலங்கினி வாழ்த்தி அகன்றாள். இராமாயணத்தின் பாவிகமே (மையப்பொருளே) "அறம் வெல்லும் பாவம் தோற்கும்" என்பது தானே.

## உறக்கத்திலேயே பார்த்தான்

ஓர் அரண்மனை வாசலில் நின்ற அனுமனைப் பலத்த காற்று ஓர் பெரிய அறையின் உள்ளே தள்ளியது. சுவரில் முட்டி நின்றான். அடுத்த பெருங்காற்று வெளியே அவனைத் தூக்கி எறிந்தது. ஒன்றுமில்லை. கும்பகர்ணனின் மூச்சு அனுமனைப் படுத்திய பாடு. உறக்கமே வரமாகப் பெற்ற கும்பகர்ணனைப் பார்த்து "இவன்தான் பாவி இராவணனா?" என யோசித்து, "பத்துத் தலைகளும், இருபது தோள்களும் இல்லையே! இவன் இராவணனுக்கு நிகரான வேறு ஒரு வீரன்" என முடிவு செய்தான்.

## கரிய நிறத்தில் அறம்

அறம் என்றால் தூய்மை, வெண்மை என்ற கருத்து உள்ளது. அரக்கர்கள் கருநிறத்தவர்கள். அனுமன் சென்ற அடுத்த மாளிகையும் அரக்கருடையதே. அதில் உறங்கியவன் சாதுவாக, அமைதியாகப் பக்தன் போல இருந்தான். அங்கு மாமிசம், கள் எதுவும் இல்லை. யார்அவன்? இராவணன் தம்பி வீடணன். ஒளிந்து வாழும் கரியநிற அறம் இவன் என்று புரிந்து கொண்டான் அனுமன்.

## பெரிய வீரன்

அடுத்த மாளிகை தேவர்கள் பயந்து பயந்து ஏவல் செய்து கொண்டிருந்த இடம். இந்திரசித்தனுடையது. இராவணனின் மகன். சூரியசந்திரரைச் சிறைபிடித்த ஆற்றலான். முருகனோ என்னுமாறு அழகன். ''எப்படியோ இவனோடு இராம இலக்குவர் பெரும்போர் புரிய வேண்டியிருக்கும்" எனப் பெருமூச்சுடன் அந்தப்புரம் நோக்கி நகர்ந்தான் அஞ்சனையின் புதல்வன்.

விழித்திருப்பவர்களையே நம்மால் புரிந்துகொள்ள இயலவில்லை.

உறங்குகின்றவரைப் பார்த்தே அவர் குணம், குற்றம் உணரவல்ல அனுமன் எத்தகைய பேரறிவாளன்.

## சானகி இல்லை

அந்தப்புரத்தில் பல பெண்கள் உறங்க, சிலமகளிர் உறங்காமல் புரண்டு கொண்டிருந்தனர். சீதையின் அங்கலட்சணங்களும், அழகும் ஓரளவிற்குப் பொருந்திய ஓர் அணங்கைத் தனிமஞ்சத்தில் பார்த்த அனுமன் ஒருகணம் துணுக்குற்றான். பின் தெளிந்தான். இவள் சானகி இல்லை. சில அடையாளங்கள் இருந்தாலும் அரக்கனது அந்தப்புரத்தில் சீதை இப்படித் துயின்றால் அறம் வாழாது. சில இலக்கணங்கள் உள. ஆனாலும் இவள் கூந்தல் விரிந்து கிடக்க இவளின் வாய் ஏதோ புலம்புகிறது. இவள் கணவன் அழியப் போகிறான். இவள் அல்லல்படப் போகிறாள். தசமுகன் மனைவி போலும் இவள் என்று அனுமன் முடிவு செய்தான். அவள் இராவணனின் மனைவி மண்டோதரிதான்.

## காலில் தழும்பா?

அனுமன் இராவணனைப் பார்த்து விட்டான். ஆலம் விழுதுகள் போல் கரங்கள். ஒளிவிடும் மகுடங்கள் அணிந்த பத்துத்தலைகள். அதென்ன அவன் காலில் தழும்பு. வீரனுக்கு மார்பில் அல்லவா விழுப்புண் வரும். திசை யானைகளின் தந்தங்கள் குத்திய தழும்புகள் அவன் மார்பில் உள. பகைமன்னர்களின் முடிகள், இவனின் காலில் விழுந்து அதனால் ஏற்பட்ட தழும்புகள். ‘‘தாள் தொழுத பகைவேந்தர் முடி உழுத சரணத்தான்’’ இராவணன்.

அவன் சீதையை என்ன செய்தானோ? எங்கு வைத்தானோ? இவனைக் கொன்றுவிட்டுத் தானும் உயிரை மாய்த்துக் கொள்ளலாமா.. இவ்வாறு பலப்பல யோசனைகள் இராவணனைப் பார்த்ததும் அனுமனுக்குத் தோன்றியது. அனுமன் கைபிசைந்து செய்வதறியாது நின்றான்.

இலங்கையில் தான் சீதை இருக்கிறாள் எனக் கழுகு சம்பாதி சொன்னானே! அவள் இருக்குமிடத்தைக் காணாது உயிர்கொண்டு கொண்டு வாளா திரும்புவேனோ? எருவைக்கு முதலாய சம்பாதி இலங்கையில் அத்திருவைக் கண்டனன் என்றான். அவனுரையும் சிதைந்ததால் “கருவைக்கும் நெருநகரைக் கடலிடையே கரையாதே உருவைக் கொண்டின்னமும் நான் உளன் ஆகி உழல்வேனோ” எனக் கலங்கினான் அனுமன்.

அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்ற அருமை வாசகம் சொல்லப்பட்ட படலம் இந்த ஊர் தேடு படலம். அறம் புகாத இலங்கையில் அரக்க வடிவில் தர்மம் வாழ்ந்து வந்தது வீடணனாக. சீதையை ஒத்தக் கற்பரசி மண்டோதரி பரமசிவபக்தை. மணிவாசகர் பாடிய பெருமை பெற்றவள். இராவணன், இந்திரசித்தன், கும்பகர்ணன் எல்லாரும் இங்கு இருக்க, சீதையைக் காணாது தவித்தது அனுமனின் உள்ளம். தேடுவோம் அனுமனோடு.

## கோவிலூர் ஆதீன வெளியீடுகள் கோவிலூர் புதையல்கள் - 3

# சீர்வளர்சீர் கருணாநிதி சுவாமிகள் அருளிய குசுமாஞ்சலி நூலின் அறிமுகம்



- கு. அன்பு மெய்யப்பன்,
உதவிப் பேராசிரியர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி - 3.

கோவிலூர் வேதாந்த மடத்தின் மூன்றாம் பட்டமாகப் பதவி ஏற்றவர் சிதம்பர ஞான தேசிகர் என்ற கருணாநிதி சுவாமிகள். தனது இருபத்தாறாம் வயதில் கோவிலூர் மடாதிபதியாகப் பொறுப்பேற்றவர். இவர் ஏழு நூல்களைப் படைத்துள்ளார். அவற்றில் ஒன்று "குருஸ்துதி குசுமாஞ்சலி" என்னும் நூலாகும்.

சீர்வளர்சீர் கருணாநிதி சுவாமிகளின் குரு கோவிலூர் ஆண்டவர் சீர்வளர்சீர் முத்திராமலிங்கர் ஆவார். "குசுமாஞ்சலி" என்பதற்கு மலர்ப் பிரசாதம் எனப் பொருள் கொள்ளலாம். அந்தவகையில் கருணாநிதி சுவாமிகள் தனது குரு பரம்பரையையும், குருவான கோவிலூர் ஆண்டவரையும் துதித்துப் பாடிய பாடல்களின் தொகுப்பாக இந்நூல் அமைகிறது.

இந்நூலில் பத்தொன்பது தலைப்புகளில் 324 பாடல்கள் அமைந்துள்ளன. பதிற்றுப்பத்து அந்தாதியாக 100 பாடல்கள், போற்றிக் கலிவெண்பாவாக 78 பாடல்கள், குருபரம்பரைத் துதியாக 12 பாடல்கள், காரணங் காணாக் கரணத்திகழ்ச்சி என்னும் தலைப்பில் 4 பாடல்கள், மனோரதம் என்னும் தலைப்பில் 4 பாடல்கள், இறைவல்லபம் என்னும் தலைப்பில் 5 பாடல்கள், போற்றிமாலை என்னும் தலைப்பில் 10 பாடல்கள், கிளிப்பயிற்று என்னும் தலைப்பில் 10, அடைக்கலம் என்னும் தலைப்பில் 10, அபயவரதம் என்னும் தலைப்பில் 10, பிரார்த்தனை என்னும் தலைப்பில் 9, திருப்பள்ளிஎழுச்சி என்னும் தலைப்பில் 10, அதிசயம் என்னும்

தலைப்பில் 10, வள்ளல் என்னும் தலைப்பில் 3, அருட்பத்து என்னும் தலைப்பில் 10, பிழைபொறுத்தல் என்னும் தலைப்பில் 3, சொரூப வணக்கம் என்னும் தலைப்பில் 4, ஸ்ரீநடராஜர் துதி என்னும் தலைப்பில் 29, சிவகாமியம்மை துதி என்னும் தலைப்பில் 3 ஆக மொத்தம் 324 பாடல்களைக் கொண்டுள்ளது.

இந்நூல் கோவிலூர் மடத்தின் ஐந்தாம்பட்டம் வீரசேகர ஞான தேசிகரின் மாணாக்கரான க.வீ.சொ. அழகப்பையா என்பவரின் வேண்டுகோளுக்கு இணங்க, வீரசேகரஞான தேசிகரின் மற்றொரு மாணவரான சுப்பைய சுவாமிகள் என்பரால் பழைய ஏட்டுச்சுவடிகளை ஆய்வு செய்து 1909இல் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

குருவின் மீதான பக்தியால் இத்தனை பாடல்களை எழுதியுள்ளார் சுவாமிகள். குருவே தாயும் தந்தையுமானவர். குருவே தெய்வ வடிவம் என்று புகழ்ந்து பேசுகிறார்.

தாய் நான் இங்கு இதற்காக இப்படிப் பிறக்க வேண்டுமென்று சூல் கொள்ளவில்லை. தந்தை நான் தனக்குப் பிறக்க வேண்டுமென்று தவம் செய்யவில்லை. நான் இங்குப் பிறப்பதற்குக் காரணமான தெய்வத்தை நான் அறிந்ததில்லை. தெய்வம் என்னை அறியுமா என்று எனக்குத் தெரியாது. ஆனால் குருவே எனக்காக வந்தீர். என்னைத் தேடி வந்தீர். என்மீது கொண்ட கருணையால் எனக்குத் தாயானீர். என் வளர்ச்சி பற்றிக் கவலைப்படுவதால் தந்தையானீர். சிறிதும் பெரிதுமான



பிரச்சினைகளிலிருந்து என்னைக் காப்பாற்றுவதால் எனக்குத் தெய்வமானீர். குருவே, நீரே சிவன், நீரே விஷ்ணு, நீரே பிரும்மா, நீரே ஆதிகடவுள், குருவே எல்லாமும்.

## இரு குருமாரும் ஒன்றே

உயர்வான முதல் குருவான உகந்தலிங்க ஞானதேசிகரையும் அக்குருவின் வழிவந்த கோவிலூர் ஆண்டவரையும் இணைத்து, நினைந்து பாடிய குசுமாஞ்சலிப் பாடல் பின்வருமாறு.

*“பொருள் வைத்த சேரிதனில் உற்றபோத புகழுற்ற ஞான குருவே*
*இருளுற்ற சிந்தை தெளிவுற்று நாளும் இணையற்ற நின்னை அடைய*
*சுருளுற்ற மாதர் மருளுற்று அலைந்த துயரென்று நீக்கி அருள்வாய்*
*தெருளுற்ற மோனர் நினைவுற்ற வன்னி திகழுற்ற தேவ சிவமே”*

பொருள் வைத்த சேரியில் மலரும் மலர் போன்ற புகழ்பெற்ற ஞான குருவே, இருள் நிறைந்த என்னுடைய சிந்தையானது தெளிவுபெற்று இணை யில்லாத நின்னுடைய திருவடிகளை அடைய வேண்டும். சுருண்ட கூந்தலையுடைய பெண்கள் மீது நான் மயங்கி அதனால் அடையும் துயரினை நீக்கியருள்வாய். குருவின் வழி தெளிந்த முனிவனே! வன்னிமரங்கள் நிறைந்த கழனிவாசலில் புகழ்பெற்ற இறைவனே! என்று கோவிலூர் ஆண்டவரையும் வேண்டுகிறார். இரு குருமார்களும் ஓர் உருவாய் இப்பாடலில் காட்சி தருகின்றனர்.

## முத்திராமக்கனி

போற்றிமாலையில் ஒரு சிறந்த பாடல் அமைந்துள்ளது.

*"குணமே வடிவான மகளிர் தம்மை*
*துறந்தவரே பரமசுகம் அடைவார் என்று*
*பக்குவம் இல அடியற்கு அருளிச்செய்த*
*பண்ணவனே பரம்பொருளே பரமா போற்றி!*
*முக்குணமும் கடந்த பரமுதல்வா போற்றி!*
*முத்திராமக் கனியே போற்றி! போற்றி!"*

துறவினை முழுமையாக ஏற்ற கருணாநிதி சுவாமிகள் ‘‘குணவதியான பெண்ணாக இருந்தாலும் அவர்களையும் துறந்தவர்களே பரமசுகம் அடைவார்கள் என்று பக்குவப்படாத எனக்கு உண்மையை உணரச்செய்த பரம்பொருளே உன்னைப் போற்றுகின்றேன். முக்குணங்களான சத்துவகுணம், இராட்சதகுணம், தாமதகுணம் என்னும் மூன்றையும் கடந்த முதல்வனே, முத்திராமலிங்கம் என்னும் கனியே போற்றி! போற்றி! ”என்று தன் குருவைப் போற்றுகின்றார்.

## பிழை பொறுப்பது குருவின் பெருமை

பிழைகள் செய்வது மனித இயல்பு. விளைவுகள் தெரிந்தே செய்வது தப்பு. விளைவினை அறியாமல் சிறுபிள்ளைத்தனமாகச் செய்வது தவறு. அப்படித் தெரியாது செய்த பிழைகளைப் பொறுத்தருளுமாறு கோவிலூர் ஆண்டவரை, கருணாநிதி சுவாமிகள் வேண்டுகிறார். மனிதராய்ப் பிறந்த நம் ஒவ்வொருவருக்கும் இது பொருந்தும். இக்கருத்தினை வெளிப்படுத்தும் பாடல் பின்வருமாறு.

*"ஞாலமதிற் பாண்டி வளநாட்டின் மேவு*
*நற்கழனி நகரமர்ந்த ஞானப் பேறே*
*சீலமிலாப் பாலனினும் அறிவிலாத*
*தீயனேன் தனைஆண்ட சீர்மாதாவே*
*பாலன் அறியாமை யினாற் செய்யாநின்ற*
*பலபிழையும் தாய் பொறுத்து ஆளுமாபோல்*
*ஆலமனக் கொடிய பாவி செய்தவறும் பிழை*
*கடமை மிகவும் பொறுத்தே ஆள்வாய்"*

என்று மக்கள் செய்த பிழையைத் தாய் பொறுத்து அருளுவது போல எம் பிழை பொறுப்பாய் என்று சீர்வளர்சீர் கருணாநிதி சுவாமிகள் பாடுகிறார். அவர் வழியில் முக்திநிலை பெற ஆசைகளை விட்டுத் துறவு மனப்பான்மை பெறுவோம். கோவிலூர் ஆண்டவர் தாள் பணிவோம்!

குருவாய் வந்து குற்றம் களைவார்!

# சோதி தரிசனம்



**- வாகீச கலாநிதி**
**கி.வா. ஜகந்நாதன்**

இறைவன் இருவருள் அனுபவம் பெற்றவர்கள் அந்த அனுபவத்தை எண்ணி இன்புறுவார்கள்; வியப்பார்கள், பலகாலும் முயன்று சாதனைகளை மேற்கொண்டு படிப்படியாக ஏறி அவனுடைய அருளில் தோய்ந்து. தம்மை மறக்கும்போது அந்த இன்பம் இத்தகையது என்று எண்ணும் நிலை இராது தம்மை மறந்து தூங்குபவர்களுக்கே, தூங்கும்போது ஒன்றும் தெரிவதில்லையே! தூங்கி விழித்த பிறகுதானே, "அப்பாடி. அகமாகத் தூங்கினேன். எவ்வளவு நேரம் தூங்கினேன் என்று தெரியவில்லை" என்ற உணர்வு வருகிறது? அதுபோல மனோலயம் பெற்று, அதற்கு மேல் சமாதி இன்பத்தில் திளைப்பவர்களுக்கு அந்த நிலையினின்றும் விழிப்பு நிலைக்கு வந்தபோது, அந்த இன்ப நிலையை நினைக்க நினைக்க ஆனந்தமும் வியம்பு மீதூரும். முன் அனுபவித்த ஆனந்தம் எல்லாம் மறந்த நிலையில் அடைவது. இப்போது உண்டாகும் ஆனந்தம் ஓர் எக்களிப்பு; ஆனந்த உணர்ச்சி அலையெழும்பும் இன்பக் கொந்தளிப்பு,

இறைவனுடைய திருவுருவத்தை ஒரு மகாபக்தர் தியானிக்கிறார், எம்பெருமானுடைய வடிவம் உள்முகத்தே தெளிவாகத் தெரியும் அளவுக்கு அவருடைய உபாசனை முறுகியிருக்கிறது. தூங்கும்போது கனவில் காணும் பொருள்கள் தெளிவாகத் தெரிவதில்லையா? அதுபோல இந்தத் தூங்காத தூக்கத்திலும் இறைவனுடைய திருவுருவம் தெளிவாகத் தெரிகிறது.

உடல் உணர்ச்சி மறந்து மனம் அந்த உள்மனக் காட்சியிலேயே ஒன்றிவிடுகிறது. அப்போது ஒரு மாற்றம் உண்டாகிறது. அளவுக்குள் அகப்பட்டதாகத் தோன்றும் அந்த வடிவம் வளர்கிறது. கை கால்கள் மறைகின்றன. சோதி வடிவாகத் தோன்றுகிறது; வடிவு சோதி வீசுகிறது; பிறகு வடிவு கரைகிறது. சோதியே பிழம்பாக நிற்கிறது. இப்போது சோதி, வெள்ளமாகப் பரந்து விரிவடைகிறது. அதற்கு எல்லை காண முடிவதில்லை. மனிதன் கடலுக்குள் மூழ்குவது போல உள்ளம் அந்தச் சோதி வெள்ளத்தில் மூழ்கி விடுகிறது. அப்பால் மனம் செயலற்றுப் போய்விடுகிறது, அதற்கு மேல் அங்கே ஒன்றும் இல்லை.

பிளாட்பாரத்திலிருந்து வண்டியில்



ஏறுகிறோம். இறங்கும்போது பிளாட்பாரத்தில் இறங்குகிறோம். அந்தப் பிளாட்பாரம் போன்றது சோதி தரிசனம். அந்த நிலைக்கு இறங்கி வந்தவர்கள் எளிதில் பின்னும் கீழே இறங்க முடியாது. இறைவனைத் தனியே வேறாகப் பார்க்கும் கடைசி நிலை அந்தச் சோதி உருவம். இறங்கும்போது முதலில் பார்ப்பது அந்தச் சோதி உருவம். மேலே ஏறுகையில் அந்தச் சோதி உருவம் தோன்றும் போது, "இனி அனுபவ எல்லைக்குள் புகுந்து விடுவோம்" என்ற எண்ணம் தோன்றாது. இயல்பாகவே சோதி நிலையிலிருந்து அகண்ட நிலைக்கு நழுவி விடுவோம்.

ஆனால், விழிப்பு நிலையில் மீண்டும் ஆய்ந்து பார்க்கும்போது அந்தச் சோதி நினைவுக்கு வருகிறது. எல்லா வடிவமும். அதற்குள்ளே கரைந்துவிடும். ஆகவே அது ஆண்டவனுடைய மூல வடிவம்; அதாவது அதற்கு அப்பால் வடிவம் இல்லை.

இந்தச் சோதி வடிவக் காட்சியைக் காரைக்கால் அம்மையார், "காதலால், காண்பார்க்குச் சோதியாய்ச் சிந்தையுளே தோன்றுமே" என்று முன் ஒரு பாட்டில் சொன்னார். இப்போது அந்தச் சோதி ஒளி வெள்ளத்தைப் பற்றி விழிப்பு நிலை யிலிருந்து எண்ணிப் பார்க்கிறார். அதற்கு மேல் உள்ளது நினைப்பில் தட்டுப்படும் அனுபவம் அல்லவே! இறைவனுடைய மூலத்திருவுருவம் அவனை வேறாகப் பார்க்கும் அந்தச் சோதிதான் என்று தெளிவாக உணர்கிறார் மனத்துக்குள் தோன்றும் அதை அணிமைச் சுட்டினால், "இது" என்று சொல்கிறார். அதை நினைந்து. வியக்கிறார், ''இது, அல்லவா ஈசனுடைய திருவுருவம்!'' என்று ஆச்சரியப்படுகிறார்.

## இது அன்றே ஈசன் திருவுருவம் ஆமாறு

இந்த உருவத்தைக் காணும் அளவுக்கு ஏற்றம் பெற்றவர்களுக்குப் பக்குவம் பெற்று

உயர்ந்தவர்களுக்கு, பிறகு ஆபத்தே இல்லை. பாதுகாப்பான இடத்திற்குப் போன்ற நிலை. அது.

அப்புறம் மேலே போக வேண்டியதுதான். பரமபத சோபான படம் என்ற ஒன்றை வைத்துக்கொண்டு விளையாடுவர். ஏணியிலே ஏறியும் இறங்கியும் போக வேண்டும். கடைசியில் ஒரு பெரிய பாம்பு இருக்கும். எல்லாவற்றுக்கும் தப்பிக் கொண்டு மேல் வரிசைக்குப் போய்விட்டால் பிறகு பாம்போ ஏணியோ இராது. அடுத்த நிலை பரமபதந்தான். பரமபதத்துக்கு முந்தின வரிசை அது அதற்குப் போய்விட்டால் அதுவே சேமமான, பாதுகாப்பான இடமாக இருக்கும், பாம்புக்கும் பயப்பட வேண்டாம். சோதி தரிசன நிலையும் அத்தகையதுதான். அதுவரையில் ஏற்றம் உண்டு. அந்த நிலையில் இறக்கம் இல்லை. அது பாதுகாப்பான நிலை. அதை அடைந்துவிட்டால் அடுத்த நிலை நிச்சயமாகக் கிடைத்துவிடும், ஆகவே அந்தப் பெரிய நிலையைப் பெரிய சேமம் என்று சொல்கிறார் அம்மையார்.

## இது அன்றே என்றனக்கோர் சேமம்!

இப்போது நினைத்துப் பார்க்கும் போது இன்னும் அந்த இன்ப மயக்கம் தெளியவில்லை, சோதியின் எண்ணம் மறைய வில்லை, கீழே வந்தும் மீண்டும் அந்த அனுபவத்தை எண்ணிப் பார்க்கிறார். சிந்தனை சுழல்கிறது. இன்னும் சுழன்று கொண்டே இருக்கிறது. மின்னும் சுடருருவாக இன்னும் சுழல்கிறதாம். மீண்டும் அந்த அனுபவத்தை எண்ணிப் பார்க்கும் போது அந்தச் சோதி சுடர் உள்ளத்திலே சுழன்று இன்ப மயக்கத்தை உண்டாக்குகிறது. "மீண்டும் ஆயும் என் சிந்தனையில் மின்னும் சுடருருவாய் அது இன்னும் இங்குச் சுழல்கின்றது" என்கிறார்.

*_– இதுவன்றே*
*மின்னும் சுடர் உருவாய் மீண்டு ஆய் என் சிந்தனைக்கே*
*இன்னும் சுழல்கின்றது இங்கு*

இப்போது விழிப்பு நிலையில் இருக்கிறார். விமானம் தரைக்கு வந்து விட்டது. ஆனால் விமானத்தில் பறக்கிறது போன்ற உணர்ச்சி இன்னும் மறையவில்லை, இங்கு, இந்த நிலையிலும் அந்தச் சுடர் உருவம் உள்ளே சுழல்கிறது.

*இதுஅன்றே ஈசன் திருவுருவம் ஆமாறு:*
*இது அன்றே என்றனக்கோர் சேமம்இது அன்றே*
*மின்னும் சுடர்உருவாய் மீண்டு ஆய்என் சிந்தனைக்கே*
*இன்னும் சுடர்கின்றது இங்கு.*

(பாடல் பொருள் இந்தச் சோதி வடிவம் அல்லவா இறைவனுடைய திருவுருவம் ஆகும் வண்ணம்? இது அல்லவா எனக்கு ஒரு பாதுகாப்பான இடம். அனுபவத்தை மீண்டும் எண்ணிப் பார்க்கின்ற என் சிந்தனையில், மின்னுகின்ற சோதி வடிவாகி இன்னும், இந்த விழிப்பு நிலையிலும், சுழன்று கொண்டிருக்கிறது.)

(அற்புதத் திருவந்தாதியில் இடம்பெறும் பாடல் இருபத்துநான்கிற்கான விளக்கம் மறு பிரசுரம்)

# மதுரை கணக்காயனாரின் மகனை காத்த கந்தவேலன்

எந்தசெயலைச் செய்தாலும் ஆழ்ந்த சிரத்தையோடு ஈடுபாட்டுடன் செய்ய வேண்டும். அப்போதுதான் அதன் பலன் சிறப்பாக இருக்கும். ஏனோதானோவென்றோ அல்லது பல பக்கமும் கவனம் சிதறவோ ஒரு காரியத்தைச் செய்தால் அது துர்ப்பலனை அளித்துவிடும். அப்படிக் கவனம் சிதறியதால் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரன் ஒரு தண்டனையை ஏற்க வேண்டியதாயிற்று. அதிலிருந்து அவர் மீண்டது முருகப்பெருமானின் அருட்செயல் ஆகும்.



**தேனம்மை இலக்குமணன்,**
காரைக்குடி

*“தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று ஒன்பது”*
*“தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று ஒன்பது”*

என்று அடிக்கடி முணுமுணுத்துக் கொண்டிருந்தது கார்முகி. அது குதிரை முகமுடைய ஒரு பெண் பூதம். திருப்பரங்குன்றத்தின் பொய்கைக் கரையில் நின்று சாலையின் இருமருங்கையும் பார்ப்பதும் பின் முகத்தைக் கோணி விரலை மடித்து நொடித்துச் சொடுக்கி அலுத்துக் கொள்வதுமாய் இருந்தபோது அங்கே ஒரு புலவர் வந்தார். அவர் மதுரைக் கணக்காயனாரின் மகனான நக்கீரனார்.

பொய்கைக் கரையில் கல்தறி வடிவில் ஒரு சிவலிங்கம் இருந்தது. ”கைலைக்கு இன்னும் எத்தனைத் திங்களோ, எத்தனை அயனமோ, இங்கேயே கல்தறியில் உன்னைக் காண்கிறேன். எப்போது என் நோய் நீக்குவாய் ஈசா பரமேசா” என்று சொல்லிக் கொண்டே நீராடி அதன்பின் தான் நாள்தோறும் செய்யும் பூசையில் ஈடுபட்டார்.

கார்முகிக்கு மகிழ்ச்சி தாளவில்லை. ’இதோ இதோ என் ஆயிரமாவது ஆள்’ என்று குதூகலித்தபடி தன் குதிரைவாயைக் குவித்துக் காற்றை ஊதியது. பொய்கைக் கரையில் இருந்த விருட்சத்திலிருந்து சில இலைகள் உதிர்ந்தன. நீரிலும் நிலத்திலும் பாதிபாதியாக விழுந்த இலையின் ஒருபகுதி மீனாகித் துள்ள முயன்றது. மற்றொரு பகுதி பறவையாகிப் பறக்க முயன்றது. இந்த விசித்திரக்காட்சியைச் சிவபூசை செய்து அமர்ந்திருந்த நக்கீரனாரும் பார்த்தார். ஒரு சிறுபொழுது சிவபூசை தவறியது. இந்தத் தவறுதலுக்காக நக்கீரரை அடுத்தநொடி பிடித்துக்கொண்டது கார்முகி.

“இதென்ன கொடுமை. யார் இந்தக் குதிரைமுக அரக்கி.” வியந்து விழித்தார் நக்கீரனார். ஒருநொடி கூடத் தாமதிக்காமல் அப்பூதம் அவரை அப்படியே தூக்கிப்போய்

ஒரு இருட்குகையில் இட்டு வாயிலில் ஒருபாறையைப் போட்டு மூடிச்சென்றது. உள்ளே பயங்கர நெருக்கடி. தோராயமாக ஆயிரம் பேர் இருப்பார்கள் என்று தோன்றியது. அவர்களின் அவலக்குரல் வேறு அவரை இம்சித்தது. "எல்லோரும் அமைதியாய் இருங்கள். என்ன நடக்கிறது இங்கே, இந்தப் பூதம் ஏன் என்னைப் பிடித்தது" என்று கேட்டார்.

"சிவபூசையில் சிந்தை தவறுவோர் ஆயிரம் பேரைப் பிடித்துக் காளிக்குப் பலி கொடுக்க அலைகிறது இந்தக் கார்முகி பூதம். அப்போது தான் அது சாபவிமோசனம் பெறுமாம். நீங்கள்தாம் அந்த ஆயிரமாவது ஆசாமி. இத்தனை நாளாக ஆயிரமாவது ஆள் அகப்படவில்லை என்று நிம்மதியாய் இருந்தோம். உம்மால் எமக்கு வந்தது வினை. எம் உயிருக்கு வைத்தீரே உலை. நீர்தாம் இதைச் சரிசெய்ய வேண்டும்" எனக் கதறினார்கள் அங்குச் சிறைப்பட்டிருந்தோர்.

"இதென்னடா மதுரைக்கு வந்த சோதனை, அதுமட்டுமில்லாமல் திருப்பரங்குன்றத்திலும் தொடர்கிறது இச்சோதனை" என்று வருந்திய நக்கீரனார், "சுப்ரமணியா, சிவகுமாரா, கந்தவேலா, உன் வேலால் எங்களைக் காக்க வேண்டியதிருக்க இப்படிக் கார்முகி யிடம் பிடிபடச் செய்து விட்டாயே. உன் தகப்பனின் கோபத்தால் நோய் பெற்றேன். உனக்கும் என்மேல் கோபமா? அவருக்குப் பூசை செய்துவிட்டு உன்னையும் பூசித்து, என் பாமாலையைச் சூட்ட எண்ணி யிருந்தேன். கந்தா! உனைப் பாடுமுன் கார்முகிக்கு இரையாகாமல் எமைக் காக்க வா" என்று இறைஞ்சினார்.

இருட்குகையுள் பயந்த மனிதர்களின் குரல்கள் ஓங்கி ஒலிக்க ஆரம்பித்தன. நம்பிக்கை கொண்ட நக்கீரரோ, "வெற்றிவேலா, வீரவேலா, தேவர்களைச் சிறைமீட்டவா, தெய்வானை மணாளா, அத்தெய்வானைக்காக உன் வேலால் தீர்த்தம் சமைத்தவா. உன் வேல் கொண்டு



வா, எம்வினைத் தீர்க்க வா" என்றெல்லாம் வேண்டுகோள் விடுத்தார்.

காற்றில் கிடுகிடு சத்தம். கார்முகி வரப்போவதன் அறிகுறியை உணர்ந்த மனிதர்கள் நடுநடுங்கிக் கிடந்தார்கள். "மலைகிழவோனே, தமிழ்க்கடவுளே, தேவசேனாபதியே, நெற்றிக் கண்ணால் எனை எரித்தார் பரமன், அந்த நெற்றிக் கண்ணில் உதித்த அழகன் நீ, எங்களை இன்னும் வாட்டாதே போர்க்கடவுளே. அமரரை மீட்டது போல் எம் ஆயிரவரையும் மீட்கவா. ஒளியாக வா... வழியாக வா..." என்று துதிக்கிறார் நக்கீரர்.

இருட்குகையுள் ஆயிரம் கோடி சூரியப்பிரகாசம் தோன்றியது. தன் தண்டைக்கால்களில் வீரக்கழல் பொலிய வேல்கொண்டு வினை தீர்க்க வந்தான் அழகன் முருகன். மனிதர்கள் வெளிச்சத்தால் கூசினார்கள். குகையின் வாயிலில் இருந்த பாறையை எத்தி உள் நுழைந்த கார்முகியோ வெளிச்சம் கண்டு விதிர் விதிர்த்தது. பயந்து பின்வாங்கி ஓட முயன்றது. சிறுநொடியும் தாமதிக்காமல் அப்பூதத்தைக் கந்தவேலனின் கைவேல் பாய்ந்து தாக்கியது. வீழ்ந்து மடிந்தது கார்முகி.

தகைசால் தமிழ்ப்புலவர்களிடம் பிரியம் கொண்ட தமிழ்க்கடவுள் கந்தவேலன் மதுரைக் கணக்காயனாரின் மகனைக் காப்பாற்றினான். திருமுருகாற்றுப்படை பாடி நக்கீரனார் குன்றுதோறும் ஆடும் குமரனைக் குறை தீர்க்க வைத்தார்.

## சிவாலயங்களின் சிறப்புகள் - 2



வே.இராமசாமி, B.Com.F.C.A.,
Chartered Accountant
பலவான்குடி

சிவனேச செல்வர்களுக்கு பணிவான வணக்கங்கள்.

சிவாலயங்களின் சிறப்புகளை மாதம் ஒரு திருக்கோயில் என எழுத இருக்கிறேன். இந்தத் தகவல்கள் கோயிலின் ஆலய குறிப்புகளில் இருந்தும் கோயில் குருக்கள் சொல்வதை வைத்தும் எழுதி எழுதியுள்ளேன்.

# திருவாலங்காடு வடாரண்யேஸ்வரர் திருக்கோயில்

இந்த வாரம் நாம் தரிசிக்க இருக்கும் திருக்கோயில் திருவாலங்காடு. சென்னை அரக்கோணம் இரயில் மார்க்கத்தில் திருவாலங்காடு ரயில் நிலையத்திலிருந்து நான்கு கிலோமீட்டர் தொலைவில் இந்த திருக்கோயில் அமைந்துள்ளது.

காலை 6 மணி முதல் பகல் 11 மணி வரையிலும் மாலை 5 மணி முதல் இரவு 9 மணி வரையிலும் திருக்கோயில் திறந்திருக்கும். மார்கழித் திருவாதிரை, பங்குனி உத்திரம் ஆகிய நாட்களில் திருவிழா சிறப்பாக நடைபெறும்.



### திருக்கோயிலின் தல வரலாறு

சும்பன், நிசும்பர் என்ற இரு அரக்கர்கள் ஆலமரங்கள் நிறைந்த ஒரு காட்டில் இருந்து கொண்டு தேவர்களுக்கும், மனிதர்களுக்கும் தீங்கு விளைவித்தனர். இதனால் தேவர்கள் சிவபெருமானிடம்

முறையிடவே, பார்வதிதேவி தன் மற்றொரு வடிவான காளிதேவியை இத்தலத்திற்கு அனுப்பினாள்.



இவ்வாலங்காட்டிற்கு வந்த காளியும் அரக்கர்களை அழித்தாள். அவர்கள் இரத்தத்தை உண்ட காளி பல கோரச்செயல்களைப் புரிந்தவாறு இக்காட்டிற்குத் தலைவியாக விளங்கினாள். முஞ்சிகேச கார்க்கோடக முனிவர் சிவனிடம் முறை யிடவே, சிவன் கோர வடிவங்கொண்டு ஆலங்காட்டையடைந்தார். காளி சிவனிடம், நீ என்னுடன் நடனமாடி வென்றால் இக்காட்டை ஆளலாம் என்றாள். போட்டி நடனம் தொடங்கியது. சிவபெருமான் ஒற்றைக்காலை மேலே தூக்கி ஊர்த்துவ தாண்டவத்தை ஆடினார். அதனை ஒரு பெண்ணாகவிருந்து செய்யவியலாத காளி தான் தோற்றதை ஒப்புக்கொள்கிறாள். இறைவனும் முன்தோன்றி உன்னை வணங்கிப் பின் என்னை அடைவார்கள் என அருள்பாலிக்கிறார். எனவே இங்கு காளிகோயில் தனித்து விளங்குகிறது.

சிவபெருமானின் தாண்டவக் கோலத்தைக் காண விரும்பித் தவமிருந்த சுனந்தமுனிவருக்கு திருவாலங்காடு சென்று தவமியற்றக் கூறினார் சிவபெருமான். அதன்படி சுனந்தர் திருவாலங்காடு வந்து நெடுங்காலம் கடும் தவமியற்றினார். அவர் அமர்ந்திருந்த இடத்தைச் சுற்றி புல் வளர்ந்து அதன் உச்சியில் முஞ் சிப்புல்லும் (நாணல்) வளர்ந்துவிட்டது! அதனால் அவருக்கு முஞ்சிகேசர் என்ற பெயரும் வந்தது.

சிவனின் திருக்கரத்தில் ஆபரணமாக இருக்கும் கார்கோடகன் என்னும் பாம்பு ஈசனின் கையிலேயே நஞ்சைக் கக்கிவிட்டது. அக்குற்றத்திற்காக அந்தப் பாம்பையும் திருவாலங்காடு சென்று தவமியற்றக் கட்டளை யிட்டார் ஈசன். திருவாலங்காட்டில் உள்ள நடராஜ தாண்டவம் ஊர்த்துவ தாண்டவம் என்று சொல்லப்படும்.

**இறைவர் திருப்பெயர்:** வடாரண்யேசுவரர், தேவர்சிங்கப்பெருமான், ஆலங்காட்டு அப்பர். இறைவன் சுயம்பு மூர்த்தி

**இறைவியார் திருப்பெயர்:** வண்டார் குழலி.

**தல விருட்சம்:** பலா, ஆலமரம்

**தீர்த்தம் :** முக்திதீர்த்தம்.

**வழிபட்டோர்:** கார்க்கோடகன், சுனந்தமுனிவர், சம்பந்தர்,

அப்பர், சுந்தரர், காரைக்கால் அம்மையார், பரணதேவ நாயனார், பட்டினத்துப்பிள்ளையார், சேக்கிழார் முதலியோர்.

திருநாவுக்கரசர், சம்பந்தர், சுந்தரர் ஆகியோரால் தேவாரம் "பாடல் பெற்ற தலமாகும்". அருணகிரிநாதர் இத்திருத்தலத்தைப் பற்றி திருப்புகழ் பாடியுள்ளார்.

## திருவாலங்காடு வடாரண்யேஸ்வரர் திருக்கோயிலின் சிறப்புகள்

1. சைவர்களின் மோட்ச தலம்

2. நடராஜப் பெருமான் நித்தமும் நடமாடும் ஐம்பெரும் அம்பலங்களில் இது பெருமானின் ஊர்த்தவ தாண்டவத் தலமாகும்.

3. பஞ்சசபைகளுள் இரத்தினசபையாகவும் சிறப்புற்று விளங்குகிறது இத்தலம். இரத்தினச்சபையின் விமானம் செப்புத்தகடு வேயப்பட்டு ஐந்து கலசங்களுடன் விளங்குகிறது.

4. இறைவனால் அம்மையே என்று அழைக்கப்பட்ட காரைக்கால் அம்மையார் தலையால் நடந்து வந்து இறைவனை வழிபட்ட தலம்.

5. அம்மனின் 51 சக்திபீடங்களில் இது காளிபீடம்.

6. இங்கு உள்ள கமலத் தேர் மிகவும் சிறப்பு பெற்றது.

7. இறைவன் இங்கு சுயம்புவாகத் தோன்றி அருள் தருகிறார்.

8. காரைக்காலம்மையார் திருவாலங்காட்டு மூத்த பதிகம் 22 ம், திருவிரட்டை மணிமாலையென 20ம் அற்புதத்திருவந்தாதி 101 பாடல்களுமென 143 பாடல்களைப் பாடியுள்ளார்.

9. ஆருத்ரா தரிசனம் மற்றும் பங்குனி உத்திரம் ஆகிய இரண்டு தினங்களில் நடராஜர் திருவீதி உலா வருவார்.

10. இங்கு வந்து இறைவனை வழிபடுபவருக்கு நடராஜர் தனது திருவடி காட்டுகிறார் என்பதை உணர்த்தும் வகையில் அவரது இடதுகாலைத் தூக்கி ஆடுகிறார்.

11. நடராஜர் ஆடிய நடனத்தைக் கண்டு மயங்கிய தேவர்களை எழுப்புவதற்காகக் கங்கை நீரை இறைவன் தெளித்தார் என்று கருதப்படுகிறது. அதன் அடிப்படையில் இங்கு தீர்த்தம் பிரசாதமாகக் கொடுக்கிறார்கள்.

12. ஐயனின் திருநடனத்தைச் சமீபத்தில் நின்று வியந்து நோக்கும் சிவகாமி அன்னை பெயர் "சமீசீனாம்பிகை".

13. இங்கு முதலில் காளியை வழிபட்ட பிறகுதான் நடராஜரை வழிபட வேண்டும்

14. நால்வர் காலத்திற்கு முன்பு பிறந்தவர் காரைக்கால் அம்மையார். சிவபெருமானை முதல்முதலில் தமிழால் பாடியவர் என்ற பெருமை காரைக்கால் அம்மையாருக்கு உள்ளது.

15. பதினோரு கைகளுடன் விநாயகப்பெருமான் அருள்தருகிறார்.

16. இந்த ஊரில் வாழ்ந்த வேளாளர்கள் பழையனூர் நீலியால் வணிகன் உயிர் போகவும் தாம் கொடுத்த வாக்குப்படி தங்கள் உயிர்துறந்து சத்தியத்தை நிலைநாட்டினார்கள். இதனைத் `துஞ் சவருவாரும்` என்னும் பாடலில் ஞானசம்பந்த சுவாமிகள் பாடியுள்ளார்.

17. இந்த திருத்தலத்தில் பெரிய ஸ்படிகலிங்கமும் சிறிய மரகதலிங்கமும் திருமுறை பேழையும் உள்ளன. இவற்றிற்கு நான்கு கால அபிஷேகம் நடைபெறுகிறது.

18. சனிபகவானின் மகன் மாந்தி தனிச் சந்நிதி கொண்டு சுபகிரகமாக அருள்புரிவது இந்தத் தலத்தின் சிறப்பம்சமாகும்.

19. ஸ்ரீநடராஜபெருமானின் பீடத்தில் திருமால் பஞ்சமுக வாத்தியம் வாசிப்பதாக அமைந்துள்ளது.

20. இரட்டை விநாயகர், பாதாள நந்தி இந்தத் தலத்திற்குப் பெருமை.

21. நடனக்கலைகளில் தேர்ச்சிபெற விரும்புவர்கள் வணங்க வேண்டிய தலம்.

22. கணவன் மனைவிக்கிடையே ஒற்றுமையைப் பலப்படுத்தும் தலம்.

முற்காலத்தில் ஆலமரக்காடாக இருந்து அதில் இறைவன் சுயம்புவாகத் தோன்றியதால் இத்தல இறைவன் வடாரண்யேஸ்வரர் என்றழைக்கப்படுகிறார்.

காரைக்காலம்மையார் தலையால் நடந்து வந்த இத்தலத்தைத் தமது காலால் மிதிக்க அஞ்சிய சம்பந்தர் ஊருக்கு வெளியில் ஓரிடத்தில் இறங்கி, அன்று இரவு துயிலும்போது, அவர் கனவில் வந்த ஆலங்காட்டப்பன் "நம்மை அயர்த்தனையோ பாடுதற்கு" என்று நினைவூட்ட அடுத்தநாள் தலத்துக்குள் சென்று கோயிலில் இறைவனைப் பதிகம் பாடி வணங்கினார்.

நடராஜர் சந்நதிக்கு எதிரே காளியின் சந்நதி இருக்கிறது.

ரத்தினசபையில் நடராஜப்பெருமானின் ஊர்த்துவதாண்டவ உற்சவத்திருமேனி மற்றும் காரைக்காலம்மையார் திருமேனிகள் உள்ளன.

### "பழையனூர்நீலி"

இத்தலத்திற்குப் பழையனூர், ஆலங்காடு என்ற பெயரும் உண்டு. நீலி என்பவள் பழையனூர் வேளாளர்களிடம் தம் கணவர் மீது புகார் அளிக்க, அவர்கள் அவளது நீலிக்கண்ணீருக்கு இரங்கி அவ்விருவரையும் சேர்ந்திருக்க அறிவுறுத்தினர். பழிவாங்கத் துடிக்கும் மனைவி தன்னைக் கொன்றுவிடுவாள் என்று அவன் மன்றாடியும் அவ்விருவரையும் அன்றிரவு ஒன்றாகத் தங்கவைத்தனர். மறுநாள் இறந்து கிடந்த கணவனின் உடலைக் கண்டு அவன் இறப்புக்குத் தாங்களே காரணம் என்று வருந்தி, வணிகனுக்கு வாக்களித்தபடி எழுபது பேரும் தங்களை மாய்த்துக்கொண்டனர்.

# சுவாமிகள் கலந்து கொண்ட நிகழ்வுகள்



சஷ்டி வழிபாட்டை முன்னிட்டு சிரவை ஆதீனம் கௌமார மடாலயத்தில் திருப்பெருந்திரு குமரகுருபர சுவாமிகளை சந்தித்தார்கள்.





சஷ்டியை முன்னிட்டு பேரூர் ஆதீனம் சார்பில் மருதமலையில் நடைபெற்ற சிறப்பு வழிபாட்டில் கலந்து கொண்டார்கள். உடன் இருப்பவர்கள் தென்சேரிமலை சுவாமிகள்,திருப்பெருந்திரு குமரகுருபர சுவாமிகள்,மற்றும் பேரூர் ஆதீனம் திருப்பெருந்திரு மருதாசல அடிகள்.





ஓசூரில் கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ், இரா மாது மற்றும் Dr. இரத்தினகுமார் அவர்களுடன்.




ஓசூரில் பக்த ஜன சபா சார்பில் நடைபெற்ற பக்தி இலக்கிய விழாவில் கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ் அவர்களுடன்



பவழக்குன்று மடம் புதிய கட்டடம் திறப்பு விழாவில் கைலாஸ் ஆசிரம மடாதிபதி ஸ்ரீ ஸ்ரீ ஜெயேந்திரபுரி சுவாமிகளுடன்.





ஈசான்ய மடத்திற்கு வருகை புரிந்த கைலாஸ் ஆசிரம மடாதிபதி ஸ்ரீ ஸ்ரீ ஜெயேந்திரபுரி சுவாமி மற்றும் பழனி சாதுசுவாமிகள் மடாலய மடாதிபதி திருப்பெருந்திரு சண்முக அடிகளுடன்.



திருவண்ணாமலை மெ க சத்திரத்தில் நிர்வாகிகளுடன்.



திருவண்ணாமலை அ க ஜாகையில் நிர்வாகிகளுடன்



திருவண்ணாமலை ஒயா மடத்தில் நிர்வாகிகளுடன்

# உலக அளவிலான காரைக்கால் அம்மையார் பாடல்கள் முற்றோதல்

அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவராக விளங்கும் காரைக்காலம்மையார் இறைவனுக்குத் தாயாகிய அன்பு நிறைந்தவர். இவர் பாட இறைவன் இன்றும் என்றும் நடனமாடிக்கொண்டிருக்கும் பேறு பெற்றவர்.

அவரின் திருப்பதிகங்களும், அற்புதத்திருவந்தாதியும், மாலைகளும் ஓதி உணர்ந்து வாழ வழி காட்டுவன. கோவிலூர் மடாலயத்தில் காரைக்காலம்மையார் பதிக முற்றோதல் 16.10.2023 அன்று இறைகருணையால் தொடங்கப்பெற்றது. தொடர்ந்து பல இடங்களில் இம்முற்றோதல் நடைபெற வேண்டும் என்ற எண்ணத்தில் இந்நிகழ்ச்சி தொடங்கப்பெற்றது.

அதன் தொடர்ச்சியாக உலக அளவில் இணைய வழியில் காரைக்காலம்மையார் பாடல்கள் முற்றோதல் ஏகன் அநேனகன் தவக்குழு, ஸ்காட்லாந்து சங்க இலக்கிய ஆய்வு நடுவம் ஆகிய அமைப்புகளும் நம் கோவிலூர் மடாலயமும் இணைந்து 9.12.2023 அன்று மாலை நான்கு மணி முதல் ஒன்பது மணி வரை பாடப்பெற்றது. இதில் உலக அளவில் ஆன்மீக அன்பர்களும், இலக்கிய வாணர்களும் கலந்து கொண்டனர்.

இந்நிகழ்வின் வரவேற்புரையை ஏகன் அநேகன் தவக்குழுவைச் சார்ந்த திரு. பெரி. முத்துராமன் வழங்கினார்.

அவர்களின் வரவேற்புரையை பார்க்க/கேட்க லிங்கை கிளிக் செய்யவும்

கோவிலூர் ஆதீனம் சீர் வளர் சீர் நாராயண ஞான தேசிக சுவாமிகள் ஆசி உரை வழங்கினார்கள்.

அவர்கள் உரையைக் கேட்க/பார்க்க இங்கு க்ளிக் செய்யவும்

இந்நிகழ்வு குறித்த சிறப்புகளை செந்தமிழ்த் திலகம் முனைவர் தேவகி முத்தையா அவர்கள் எடுத்துரைத்தார்.

அவர்கள் உரையைக் கேட்க/பார்க்க இங்கு க்ளிக் செய்யவும்

தொடர்ந்து ஆடியபாதா நடராஜா என்ற தலைப்பில் அறிவியல் சார்ந்து அண்ணாமலைப் பல்கலைக்கழக துணைவேந்தர் முனைவர் இராம. கதிரேசன் வழங்கினார்.

அவர்கள் உரையைக் கேட்க/பார்க்க இங்கு க்ளிக் செய்யவும்

இதனைத் தொடர்ந்து பேராசிரியர் கோ.ப. நல்லசிவம் அவர்கள் நம்மைப்







பேணும் அம்மை காண் என்ற தலைப்பில் அம்மையார் வரலாற்றை எடுத்துரைத்தார்.

அவர்கள் உரையைக் கேட்க/பார்க்க இங்கு க்ளிக் செய்யவும்

தொடர்ந்து திருமுறை வழிபாடாக பத்துத் திருமுறைப் பதிகங்கள் பாடப்பெற்றன. இதனைத் தொடர்ந்து கம்ப வாரிதி இலங்கை ஜெயராஜ் அவர்கள் ஆண்டவனின் அன்னை என்ற தலைப்பில் ஆய்வுரை வழங்கினார்.

அவர்கள் உரையைக் கேட்க/பார்க்க இங்கு க்ளிக் செய்யவும்

மேலும் காரைக்காலம்மையார் பற்றிய நூலை எழுதி வெளியிட்ட திரு. இராமநாதன் பழனியப்பன் அவர்கள் கறைகண்டன் சேவடி சேர்ந்த காரைக்கால் அம்மையார் என்ற தலைப்பில் சிறப்புரையாற்றினார்.

அவர்கள் உரையைக் கேட்க/பார்க்க இங்கு க்ளிக் செய்யவும்

தொடர்ந்து காரைக்கால் அம்மையார் பாடல்கள் அனைத்தும் இணையவழியில் முற்றோதல் செய்யப்பெற்றன. இவற்றின் தொடுப்புகள் தங்களின் காதுகளுக்கும், கண்களுக்கும் இனிமை சேர்க்கும் வகையில் இங்குத் தரப்படுகின்றன. கேட்டு அம்மையாரின் அருள்பெருவெள்ளத்தில் ஆனந்த அனுபவம் கொள்வோம்.

நாளும் நாளும் காரைக்காலம்மையார் பாடல்களை ஓதிப் பயன்பெறுவோம். சிவலாயங்களில் காரைக்கால் அம்மையார் பாடல்களை முழங்கச் செய்வோம்.

# தென் சபாநாயகர் கோயில் தரிசனம்

அருள்மிகு ஆறுமுகப் பெருமானுக்கு 13.11.2023 திங்கட்கிழமை தொடங்கிய சஷ்டி வழபாடு 18.11.2023 அன்று சிறப்பு அபிஷேகங்கள், திரிசத நாமவளி அர்ச்சனையுடன் நிறைவு செய்யப் பெற்றது.

கார்த்திகை மாத முதல் மூன்று சோமவாரங்களிலும் அருள்மிகு மூலநாதருக்கும் 11.12.2023 அன்று படிக லிங்கத்திற்கும் 108 சங்காபிஷேக வழிபாடு சிறப்பாக நடைபெற்றது. படிகலிங்க சங்காபிஷேகம் பார்க்க இந்த லிங்கை கிளிக் செய்யவும்

7.12.2023 வியாழக்கிழமை திருவாசக முற்றோதல் நிகழ்ச்சியும், 10.12.2023 ஞாயிறு அன்று திருப்புகழ் பாராயணமும் அன்பர்களால் நடத்தப் பெற்றன.

**மார்கழி மாத வழிபாட்டு நிகழ்ச்சிகள்:**

மார்கழி மாதம், தினசரி காலை 6.30 மணிக்கு திருப்பள்ளி எழுச்சி வழிபாடுகள் நடைபெறும்

20.12.2023 வளர்பிறை அஷ்டமி மாலை வைரவர் அபிஷேகம்

22.12.2023 வளர்பிறை ஏகாதசி மாலை பெருமாள் அபிஷேகம்

23.12.2023 அதிகாலை வைகுண்ட ஏகாதசி

27.12.2023 மாலை ஆருத்ரா தரிசன வழபாடு நடராஜர் அபிஷேகம்

30.12.2023 சங்கடஹர சதுர்த்தி விநாயகர் வழிபாடு

04.01.2024 தேய்பிறை அஷ்டமி வைரவர் அபிஷேகம்

09.01.2024 பிரதோஷம்

# கோவிலூர் ஆண்டவர் நூலகம்

கோவிலூரில் அமைக்கப்பெற்றுள்ள "கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில்" சுமார் 40,000 நூல்கள் உள்ளன. நூல் விவர அட்டவணையைப் பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.

# கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகம்




கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள நூல்கள் அனைத்தையும் கோவிலூர் ஆண்டவர் நூலகம் என்ற இணையதள நூலகத்தில் பதிவேற்றம் செய்து தமிழ்க் கொடையாக அளிக்க முடிவு செய்துள்ளோம்.

தற்போது சுமார் 2840 அரிய நூல்கள் இணைய நூலகத்தில் நூல்கள் உள்ளன.

இப்போது நாள் ஒன்றுக்கு சுமார் 150 பக்கங்களைப் புதிதாக இந்த நூலகத்தில் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். விரைவில் நாள் ஒன்றுக்கு சுமார் 700 பக்கங்களை சேர்க்கும் பணி நடந்து கொண்டிருக்கிறது.

இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்க /பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள (பட்டியலில் காட்டப்பெற்றுள்ள) எந்த நூலாவது உங்களுக்கு தேவை என்றால் நூலகப் பொறுப்பாளர் திரு வெங்கடாசலம் அவர்களைத் (தொலைபேசி எண் 9442912649 என்பதில்) தொடர்பு கொள்ளவும். அந்த நூல் பதிப்புரிமைக்கு அப்பால் இருக்கும் நிலையில் அதை நம் இணைய நூலகத்தில் சேர்த்திட ஆவன செய்கிறோம். தாங்களும் அந்த நூலை உங்கள் வீட்டில் இருந்து இணையவழியாகப் படிக்கலாம். நூல் இணையத்தில் சேர்த்தபின் உங்களுக்குத் தகவல் தெரிவிக்கப்படும். நீங்கள் அந்த நூலை இணைய நூலகத்தில் படித்துக் கொள்ளலாம் அல்லது பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். இதற்கு எந்தக் கட்டணமும் இல்லை

இணைய நூலகத்தில் சென்ற மாதத்தில் மட்டும் சுமார் 60 நூல்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. மிகவும் அரிதான சில நூல்கள் இப்போது பதிவேற்றம் செய்யப் படுகின்றன.

இணைய நூலகத்தைப் பயன்படுத்துவோம். இறை தத்துவங்களை அறிவோம்.

# எதிர் வரும் நிகழ்வுகள்

15.12.2023 முதல் 19.12.2023 வரை கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ் அவர்கள் செய்து வரும் மகத்தான சேவையை நேரில் கண்டு உணரும் பொருட்டு இலங்கை பயணம்.

23.12.2023 புதுச்சேரி அம்பலத்தடையார் மடத்திற்கு விஜயம்

24.12.2023 கோவை நகரத்தார் சங்கம் 60ம் ஆண்டு விழா

26.12.2023 திருவண்ணாமலை ஈசான்ய ஞான தேசிகர் குருபூஜை

29.12.2023 முதல் 02.01.2024 வரை மலேசியாவில்

02.01.2024 அன்று நம் மடமும், மதுரை மு.கண்ணப்ப செட்டியாரும், மயிலாடுதுறை நகரத்தாரும் இணைந்து பங்கு கொள்ளும் இயற்பகை நாயனார் குருபூஜை பூம்புகார் சாயாவனத்தில் நடைபெற உள்ளது.

தென்சபாநாயகர் கோவில் கட்டளைகளில் பங்கு கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை தொடர்பு கொள்ளவும்.

♦♦♦♦♦

திருநெல்லை இணைய வழி திங்களிதழை பெற விரும்புபவர்கள் 94433 37011 என்ற எண்ணிற்கு வாட்சப்-பில் தொடர்பு கொள்ளவும்.

♦♦♦♦♦

இணைய வழி தேவார இன்னிசை வகுப்பில் கலந்து கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை வாட்சப்-பில் தொடர்பு கொள்ளவும்.

♦♦♦♦♦

திருநெல்லை இதழுக்கான ஆன்மிகப் படைப்புகள் வரவேற்கப்படுகிறன. திருநெல்லை (இணைய இதழ்), கோவிலூர் மடாலயம், கோவிலூர் என்ற முகவரிக்கு அஞ்சலிலோ அல்லது நேரிலோ தங்கள் ஆக்கங்களை அன்பர்கள் அளிக்கலாம்.

♦♦♦♦♦

திருநெல்லை இணைய வழி மாத நாளிதழ் பற்றி தங்களுடைய மேலான கருத்துக்களை வாட்சப் எண். 94433 37011 மற்றும் koviloormadalayam@gmail.com என்ற மின்னஞ்சலுக்கு அனுப்பவும்.